# பெர்னார்ட்ஷா வாழ்வும் பணியும்



பிஎல். முத்துக்குமரன்

# பெர்னார்ட்ஷாவின் வாழ்வும் பணியும்

பிஎல் முத்துக்குமரன்

பிருந்தாவனம்

323/10, கதிரவன் காலனி
அண்ணா நகர் மேற்கு,
சென்னை – 600 040.

**BIBLIOAGRAPHICAL DATA**

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Bernartsha Vazhvum Paniyum |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition April 2002 |
| Edited by | : | PL. Muthukkumaran |
| Copy Right | : | Author |
| Paper used | : | White Printing 11.6 Kg. |
| Size of the Book | : | Crown 18.5 X 12.5 Cms. |
| Type Point | : | 12 Point |
| No. of Pages | : | 96 |
| No. of Copies | : | 1000 |
| Publisher | : | **Brindavanam**<br>323/10 Kathiravan Colony,<br>Annanagar West, Chennai - 4( |
| Printed at | : | Print Process, Chennai - 5 |
| Binding | : | Section Stitching |
| Price | : | **Rs. 20.00** |
| Subject | : | Life History |

# முன்னுரை

உலகப் புகழ்பெற்ற சிந்தனையாளர்களான டால்ஸ்டாய், ஷேக்ஸ்பியர், பெர்னார்ட்ஷா ஆகியோர் பெயர்களை சிறுவயதிலேயே தெரிந்து கொள்கிறோம். ஆனால் அவர்களுடைய உயர்ந்த வாழ்வு நெறிமுறைகளை தெரிந்து கொள்வதற்கு வாய்ப்பில்லாமல் போகிறது. அதற்காக முதலாவதாக "பெர்னார்ட்ஷாவின் வாழ்வும் பணியும்" இப்போது நூலாக வெளிவந்துள்ளது. இதைத் தொடர்ந்து மற்ற நூல்களும் வெளிவரும்.

*பிஎல். முத்துக்குமரன்*

# பொய்ப் பற்கள்

சீன நாட்டினர் ஒருவர் ஷாவை நேரில் கண்டு அவருடைய உடல் அமைப்பு ஒவ்வொன்றையும் பாராட்டத் தொடங்கினார்.

தம்முடைய பற்களை சீனர் கவனிப்பதைக் கண்ட ஷா "பல்லின் தோற்றம் எப்படி?" என்று கேட்டார்.

"மிகப் பாராட்டத்தக்கதாகவே இருக்கிறது" என்றார் அந்தச் சீனர்.

"அப்படியானால் அதை அருகில் வைத்தே பாருங்களேன்" என்று கூறி, தம் பற்களைக் கையில் எடுத்துக் கொடுத்தார் ஷா.

சீனர் பாராட்டிய பற்கள், பொய்ப்பற்கள் என்பதை இதைவிட நகைச்சுவையாக எப்படிக் கூற முடியும்?

# ஷா பிறந்தார்

1856-ம் ஆண்டு ஜூலை மாதம் 26ம் தேதி அயர்லாந்து நாட்டின் தலைநகரமான டப்ளினில், ஜார்ஜ் பெர்னார்ட்ஷா பிறந்தார்.

ஷாவுக்கு முன் பிறந்தவர்கள் இரண்டு சகோதரிகள்.

ஷாவின் தந்தையின் பெயர் ஜார்ஜ் கார்ஷா என்பதாகும்.

ஷாவின் தந்தை அரசாங்க அலுவலில் இருந்தார், குடும்பப் பொறுப்பே இல்லாதவர்.

ஷாவின் தாய், நல்ல வாழ்க்கை வாழ ஆசையுடையவராக இருந்தார். அவருக்கு இசைக்கலையில் பயிற்சி இருந்தது. பொறாமை, பகைமை முதலியவை இல்லாதவர். எளிமையான தோற்றம் உள்ளவர். பண்பு மிக்கவர்.

என்றாலும், தம் கணவருடைய குடிப்பழக்கமும் பொறுப்பற்ற தன்மையும அவருடைய நல்ல உள்ளத்தில் வெறுப்பை வளரச் செய்தது.

நாளடைவில், கணவரை விட்டுப் பிரிந்து வாழக்கூடிய நிலை அவருக்கு ஏற்பட்டது.

“ தந்தை குடும்பக் கவலையே இல்லாதவர்; தாயோ யாரையும் கண்டித்து வளர்க்கும் சக்தியற்றவர். குடும்பத்தில் அன்போ, பகையோ, பயமோ, மதிப்போ இல்லை. குழந்தைகளை வழிகாட்டி வளர்க்கும் முயற்சியும் இல்லை. தாய் ஒரு பக்கம்; தந்தை ஒரு பக்கம்; பிள்ளைகளாகிய நாங்களும் ஆளுக்கு ஒரு பக்கமாக வளர்ந்து வரலானோம்” என்று ஷா எழுதுகிறார்.

## தீமையை உணர்ந்தார்

ஷா சிறுவனாக இருந்தபோது அவரை வெளி இடங்களுக்குக் கூட்டிக்கொண்டு போய், சுற்றிக் காண்பித்து வருமாறு வேலைக்காரியிடம் ஏற்பாடு செய்தனர். அவளோ பூங்காவுக்கோ, வாய்க்கால் கரைப்பகுதிக்கோ, செல்வந்தர் வாழும் பகுதிக்கோ அழைத்துச் செல்லாமல், தன் நண்பர்களைக் காண்பதற்கு, இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி, ஏழைகள் வாழும் சேரிப் பகுதிகளுக்குச் சென்று பொழுதைக் கழித்தாள்; நண்பன் எவனாவது அவளை உணவு விடுதிக்கு அழைத்துச் செல்வதும் உண்டு.

“அப்பொழுது ஷாவுக்கு திண்பண்டங்களும் பழச்சாறுகளும் நிறையக் கிடைக்கும். ஆனாலும் ஷாவுக்கு அதில் வெறுப்பு ஏற்படத் தொடங்கியது.

குடியின் தீமையைப் பற்றி தந்தை கூறியிருந்த அறிவுரைகளை நினைத்து, ‘அத்தகைய உணவு விடுதிகள் கெட்ட இடங்கள்’ என்று ஷா உணர்ந்தார்.

வேலைக்காரியுடன் சேரிகளுக்குச் சென்று கண்ட அனுபவத்தைப் பற்றி ஷா,

“என் வாழ்நாள் முழுவதும் நான் வறுமைக்கு விரோதமாக விளங்கியதற்கும், வறியவர்கள் இல்லாதபடியும், மறுபடியும் தோன்றாதவாறும் வழி வகுப்பதில், என் வாழ்நாள் முழுவதும் நான் தொண்டு செய்ய முற்பட்டதற்கும் காரணமான முதல் அனுபவமே இது தான்” என்று பிற்காலத்தில் குறிப்பிட்டார்

## குடும்பத்தின் அலங்கோலம்

அக்கம் பக்கத்தாரோடு மதிப்பாகப் பழகுவதையும், உறவினர்களின் இல்லங்களுக்குச் சென்று அளவளாவு வதையும் ஷாவின் குடும்பம் இழந்துவிட்டது.

தந்தையின் குடிப்பழக்கமே எல்லோரும் அவரைப் புறக்கணிப்பதற்குக் காரணமாக இருந்தது.

கணவருடைய நடத்தையால், மனைவிக்கும் கௌரவம் இல்லாமல் போய்விட்டது.

எந்த வீட்டாரும், எந்த நிகழ்ச்சிக்கும் அவர்களை அழைப்பது இல்லை.

"தாயும் தந்தையும் சேர்ந்து எங்கேயாவது விருந்துக்குச் சென்றிருந்தால், அப்பொழுது, வீடு தீப்பற்றி எரிந்தாற்போல் எங்களுக்குத் திடுக்கிடக்கூடிய செய்தியாக இருந்திருக்கும்" என்று ஷா கூறுகிறார்.

தந்தைக்குக் கிடைத்த வருமானத்தைக் கொண்டு குடும்பத்தை நல்லபடியாக நடத்தி, மக்களைப் படிக்க வைத்திருக்க இயலும், ஆனால், குடிப்பழக்கம் இடையூறாக இருந்து, வருமானத்தை அழித்தது ஒரு பக்கம்; மற்றவர்களுக்கு இணையாக வாழவேண்டும் என்ற போலி மனப்பான்மையால் சிக்கனத்தைக் கடைப்பிடிக்காதது மற்றொரு பக்கம்; இதனால் குடும்பத்தில் பண நெருக்கடி முற்றியது.

இசையில் பயிற்சியும், திறமையும் ஷாவின் தாய்க்கு இருந்ததால், பிற்காலத்தில் குடும்பத்தைக் காப்பாற்ற அதுவே உதவியது.

அடுத்த தெருவில் வசித்து வந்த இசை ஆசிரியரின் உதவி குடும்பத்துக்குக் கிடைத்தது. அவர் திருமணம்

ஆகாதவர். அவர் பெயர் லீ; ஷாவின் தாய் அவரிடம் இசைப் பயிற்சியை நன்றாக வளர்த்துக் கொண்டார். பிறகு ஷா குடும்பத்தினரும் அவரும் ஒரே வீட்டில் வசிக்க ஏற்பாடு செய்து கொண்டனர்.

## இசை ஆசிரியரிடம் கற்றவை

இளமையிலேயே, இசை ஆசிரியரிடமிருந்து சில பழக்கங்களைக் கற்றுக்கொண்டார் ஷா.

இசை ஆசிரியர் லீ தன் வாழ்வில், இயற்கைக் காட்சிகளையும், இசையையுமே முக்கியமாகக் கருதிப் போற்றினார். அவை இரண்டும் ஷாவிடமும் அப்படியே படிந்து விட்டன.

'சன்னல்' கதவுகளைத் திறந்த வைத்து விட்டே லீ உறங்குவார், ஷாவும் இறுதிவரை அவ்வாறே செய்து வந்தார்.

லீக்கு டாக்டர்களிடத்தில் நம்பிக்கை இல்லை. ஷாவின் உள்ளத்திலும் இது பதிந்தது.

இல்லம் சிறிது சிறிதாக இசையரங்காக மாறத் தொடங்கியது.

ஷா இளமையிலேயே இசைக்கலை பயின்றவர்.

இசை ஒன்றே இளமையில் குடும்பச் சொத்தாக இருந்து வந்ததால், ஷா பிற்காலத்தில் இசைக்கலையில் ஆராய்ச்சி மிக்கவராகவும் விளங்கினார்.

தாயைப்போலவே மக்களும் இசையில் தேர்ச்சி பெற்றனர்.

தந்தை அலுவல் பார்த்து வந்த அலுவலகத்தில், ஆட்குறைப்பு காரணமாக, அவர் வேலையை இழக்க நேரிட்டது. ஆயினும், ஒய்வு ஊதியம் அவருக்குக் கிடைத்தது. அதைக் கொண்டு ஒருவரோடு கூட்டாக வியாபாரம் செய்யத் தொடங்கினார். அந்த வியாபாரத்தைச் சரிவரக் கவனிக்காததால், எப்படியோ அது நடந்து வந்தது. வியாபாரம் போராட்டத்தோடு நகர்ந்து கொண்டிருந்தது என்றே கூறவேண்டும்.

## வறுமையில் வாடிய குடும்பம்

தந்தையின் இறுதி நாள் வரையில், அந்த வியாபாரத்தின் மூலம் சிறிய வருமானமே கிடைத்து வந்தது. பற்றாக்குறையால், குடும்பத்தில் வறுமை வாட்டியது. துன்பம் தாளாமல், தாய் லண்டன் நகரத்தை அடைந்தார்.

குடும்பம் இவ்வாறு பிரிந்த பிறகும், இயன்ற அளவு சிறுதொகையை தந்தை குடும்பத்துக்கு கொடுத்து வந்தார்.

மீண்டும் குடும்பத்தோடு சேர்ந்து வாழ வேண்டும் என்ற எண்ணமே அவருக்கு இல்லை. அதற்கான முயற்சி எதுவும் செய்யாமல் ஏதோ ஒருவகையாக காலத்தைக் கழித்தார்.

"இந்த நிலையை, அன்பு இல்லாதது என்றோ, குறை உடையது என்றோ நாங்கள் யாருமே உணரவில்லை, பழக்க வழக்கங்களைப் பற்றியோ மற்ற உணர்ச்சிகளைப் பற்றியோ நாங்கள் கவலைப்பட்டதே இல்லை" என்று ஷா எழுதுகிறார்.

இதற்கெல்லாம் காரணம், சமுதாயத்திலிருந்து ஒருவாறு பிரிந்து வாழ்ந்த குடும்பமாக இருந்ததே ஆகும்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு, தந்தையின் குடிப்பழக்கம் ஒரு முடிவுக்கு வந்தது, ஒரு ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் அவர் கீழே விழுந்து அடிபட்ட பெரிய துன்பமே அவரைத் திருந்தச் செய்தது. குடிப்பழக்கத்தை இனி நிறுத்தாவிடில், உயிர் போய்விடும் என அவரை உணரச் செய்தது. அவரும் அதை உணர்ந்தார். ஆனால், உணர்ந்தும் அதனால் பயன் இல்லை என்று சொல்லத்தக்கவாறு, இறுதிக்காலத்தில் உணர்ந்ததால் குடும்பத்துக்கு அதனால் எவ்வித நன்மையும் உண்டாகவில்லை.

## இரண்டும் கெட்டான் நிலை

சீரான உடை இல்லாமலும், தபால் செலவுக்கு என்ன செய்வது என்ற நிலையில் இருந்த ஷா சோர்வு அடைந்து விடவில்லை. அதைப்பற்றி.

"புகழுக்கும், இகழ்ச்சிக்கும், கவலைப்படாத ஒருவித தன்மை, அந்த நாள் முதல் எனக்குப் பயன் உள்ளதாக இருந்து வருகிறது. அதனால் புத்தக வெளியீட்டிலும் நாடக முறையிலும் அக்கறை குறைந்தவனாக இருந்து வந்தேன். அது வளர்ந்து சில சமயங்களில் எனக்கு இடையூறாகவும் இருந்தது. தொடர்ந்து எழுத்து வேலைகளைச் செய்வதற்கும் இயலாது என்று உணரும்படியும் செய்தது. அதனால், பிற்காலத்தில் எனக்குக் கிடைத்த வாய்ப்புகளைப் பயன் படுத்திக் கொள்ளாமல், நெகிழவிடுவதும் ஒத்திவைப்பது மாகத் தவறும் செய்திருக்கிறேன்.

## லண்டனுக்குப் பயணம்

தாயும் சகோதரிகளும் லண்டனுக்குப் போய் வாழ முற்பட்டார்கள். ஷாவுக்கு அப்போது வயது பதினைந்து.

வறுமை காரணமாக, உயர்நிலைக் கல்வி கற்க வசதியின்றி ஷா வளர்ந்தார். ஆயினும் நுட்பமான அறிவு இருந்தமையால், ஆங்கில நூல்கள் பலவற்றை அப்போதே படித்திருந்தார்.

கவிஞர் ஷெல்லி ஒருவரே, ஷாவின் உள்ளத்தைக் கவர்ந்தவராம்.

ஷாவுக்கு இளமையில் கல்வித் துறையில், வாய்ப்புக் குறைவாக இருந்தது போலவே, சமுதாய உறவுக்கு உரிய நவீனப் பழக்க வழக்கங்களுக்கும் வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது.

அவர் வளர்ந்த குடும்பமானது, சமுதாயத் தொடர்பற்ற குடும்பமாக இருந்ததே காரணம் போலும்!

உலகத்தை ஒட்டி, போலி நாகரிக மதிப்பைத் தேடி மற்றவர்களோடு இணைந்து நடக்க முடியாமல் ஷா வாழ்ந்ததற்கும் இதுவே காரணமாக அமைந்தது எனலாம்.

ஷா இளமையில், சமயத் துறையில் போதி அறிவு இல்லாமலேயே வளர்ந்தார்.

## இளமையில் புலமை

ஷாவுக்கு பத்தாவது வயது தொடங்கும் முன்பே அவருடைய குடும்பத்தார் மாதா கோயிலுக்குப் போவதைக் கைவிட்டார்கள். பொறுப்பற்றவர்கள் நடத்தும் குடும்பத்தில், வறுமையும் புகுந்து வாழ்க்கைப் போராட்டத்தை வளர்த்தால், அங்கே எதை எதிர்ப்பார்க்க முடியும்?

பத்தாவது வயதிலேயே சுயமாக வழிபாட்டு உரை இயற்றி வழிபடும் திறமை ஷாவுக்கு இருந்ததாம். பிற்காலத்தில் பெரும் அறிஞராக மொழிப்புலமை பெற்றுத் திகழ்ந்ததற்கு அது அறிகுறியாக இருந்தது.

கதைப் புத்தகங்களைப் படிப்பதில் ஷாவுக்கு சிறு வயதிலேயே மிகுந்த ஆர்வம் இருந்தது. ஒரு முறை சித்தியின் கிராமத்துக்குச் சென்றிருந்தபோது அங்கே 'ஆயிரத்தோரு இரவுகள்' என்னும் அராபியக் கதைப் புத்தகத்தைக் கண்டார். தினமும் பொழுது விடிந்ததும், படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தபடியே, அந்தப் புத்தகத்தை எடுத்துப் படித்துக் கொண்டிருந்தார். சித்தி சாப்பிடக் கூப்பிடும் வரையிலும் கதையிலே மூழ்கியிருந்தார். ஒரு நாள் இதைக் கண்ட சித்தி, அந்தப் புத்தகத்தை எடுத்து ஒளித்து வைத்துவிட்டார். ஷா விடவில்லை. மறுபடியும் அதைத் தேடி எடுத்துப் படுக்கையின் அடியில் ஒளித்து வைத்துக்கொண்டார்.

## கடன் வாங்கப் பயந்தார்

ஷாவின் வறுமை கொடியதாக இருந்தது. ஆனாலும், அவர் கடன் வாங்கிச் செலவு செய்யப் பயந்தார்.

ஒரு நண்பனிடம் ஐந்து பவுன் கடன் வாங்கி பின்னர், அதைத் திருப்பிக் கொடுக்க முடியாமல் போய்விட்டால் ஐந்து

பவுனுக்காக அவனுடைய நட்பை விற்று, இழந்தது போலாகுமே என்றார் இந்த உணர்ச்சியானது ஷாவுக்கு இளமையிலேயே இருந்தது.

ஷாவின் பணக்கஷ்டத்தை அறிந்து, தாங்களாகவே கொடுக்க முன்வந்த நண்பர்களின் உதவியையும் அவர் பெற்றுக்கொள்ளாமல் இருந்து வந்தார்.

அவருக்கு வேலைத் தேடி தர நண்பர்கள் முன்வந்த போதும், அதை ஏற்க அவர் தயங்கினார்.

சில இடங்களில் வேலைக்காக முயன்றார். ஆனால் முயற்சியில் அக்கறை இல்லாமல் சோர்வோடுதான் முயன்றார்.

## கணக்கர் வேலை பார்த்தார்

எப்படியோ அவர் ஏற்றுக்கொண்ட முதல் வேலை டப்ளின் நகரத்தில் ஒரு குறுநில மன்னரிடம் கணக்கர் வேலை. மாதம் பதினெட்டு ஷில்லிங் சம்பளம். பின்னர் படிப்படியாக அது முப்பது ஷில்லிங்காக உயர்ந்தது. அப்பொழுது தலைமைக் கணக்கர் இறந்து போனார். அந்த அலுவலுக்குத் திறமைமிக்க ஒருவர் தேவைப்பட்டது. ஷாவின் திறமையை உணர்ந்த முதலாளி, அவரையே அதற்கு நியமித்து விட்டார்.

தலைமைக் கணக்கர் அலுவலைச் செம்மையாகவும், நாணயமாகவும், கணக்கு முதலியவற்றை ஒழுங்காகவும் பார்த்துப் பொறுப்போடு நடந்து கொண்டார். முதலாளியின் மனதைக் கவர்ந்தார். ஆண்டுக்கு நாற்பத்து எட்டு பவுனாக சம்பளம் உயர்ந்தது. அந்தத் துறையிலே திறமையாகத் தான் திகழ நேர்ந்ததை எண்ணி, ஷாவே வியப்புற்றார். ஆயினும், அலுவலில் விருப்பம் கொள்ளவில்லை. ஒரு மாத முன் அறிவிப்புக் கொடுத்து வேலையை விட்டு விலகிவிட்டார்.

தந்தைக்கு இது விளங்கவில்லை. அந்த முதலாளியிடமிருந்து, மகனுக்காக ஒரு நற்சான்று வாங்கி வந்தார். தந்தையின் செயல், ஷாவுக்கு வருத்தத்தையும், கோபத்தையும் உண்டாக்கியது.

முதலாளியோ ஷாவை விட்டுவிட மனம் இல்லாமல் எவ்வளவோ முயன்றார். சம்பளத்தை உயர்த்தித் தருவதாகக் கூடக் கூறினார். ஷாவோ பிடிவாதமாக மறுத்துவிட்டார்.

## ஷாவுக்குக் கிடைத்த கௌரவம்

இருபத்தைந்து உலகப் பிரமுகர்களின் பட்டியல் ஒன்றை மேல்நாட்டு ஆசிரியர் ஒருவர் தயாரித்து, பிரபலமான பத்திரிகை ஒன்றில் வெளியிட்டார்.

பெரும் பதவி வகித்தவர்; பெருந்தன்மை வாய்ந்தவர்; உலகிலேயே தைரியசாலியான ஆகாய விமானி; குபேரர்;

அன்பு நிறைந்தவர்; சோகம் நிறைந்தவர்; நீதிமான்; விகட நிபுணர் இப்படியாக பிரபலமானவர் பெயர்கள் வெளியிடப்பட்டன.

## லண்டன் புறப்பட்டார்

பின்னர் சில நாட்கள் ஓய்வு எடுத்துக் கொண்டு லண்டனுக்குத் தாயிடம் போய்ச் சேர்ந்தார்.

தமக்கு இசை கற்றுத் தருமாறு தாயிடம் கேட்டுக் கொண்டார்.

தாயிடம் இசை பயிலும்போது, அரைகுறையாகவும் தவறாகவும் பாடிய இசைப் பகுதிகள் தாயின் உள்ளத்தைப் புண்படுத்தின. ஆனால் தம்முடைய வருத்தத்தைத் தம் மகனிடம் அவர் காட்டிக் கொள்ளவில்லை, பிற்காலத்தில் தாய் உண்மையைக் கூறினாராம்.

அப்பொழுது, ஷா தவறாகப் பாடிய பாடல்களைக் கேட்டதும் தாய் எழுந்து தனியே சென்று சிறிது நேரம் அழுதுவிட்டு ஆறுதல் அடைந்து திரும்ப வேண்டும் என்று அந்தத் தாயின் கலை உள்ளத்துக்குத் தோன்றியதாம்.

சிறந்த கலை உள்ளத்துக்கு இவ்வாறு வருத்தத்தை உண்டாக்கி வந்ததை எண்ணி பிற்காலத்தில் ஷா தம்மை நொந்து கொண்டிருக்கிறார்.

## இசையில் தேர்ச்சி

பின்னர், இசைக்கலையில் தேர்ச்சி பெற்றுவிட்டார் ஷா!

தம் தாயின் ஆசிரியர் லீ நடத்திய இசையரங்குகளில் ஷா திறமையாகப் பியானோ இசைத்து வந்திருக்கிறார்.

ஒரு பத்திரிகையில் இசைப்பகுதிக்கு மதிப்புரை எழுதும் வாய்ப்பு இசை ஆசிரியர் லீக்குக் கிடைத்தது. அதை அவர் ஷாவின் மூலம் நிறைவேற்றி, அதற்குக் கிடைத்த சன்மானத்தையும் ஷாவையே பெற்றுக்கொள்ளச் செய்தார்.

ஆனால், ஷா எழுதிய இசை விமர்சனங்கள், இசைத் துறையில் உள்ளவர்களுக்குப் பிடிக்காததால், அப்பத்திரிகை, பலருடைய வெறுப்புக்கு ஆளாகி நின்று போயிற்று.

ஷா லண்டனுக்கு வந்த பிறகும் இரண்டு ஆண்டுகள் வரை, பயனுள்ள ஒரு தொழிலும் செய்யாமல் காலம் கழித்தார்.

## உழைப்பே மூலகாரணம்

அவருக்கு இருந்த சூழ்நிலையும் சுபாவமும் வேறு ஒருவருக்கு இருந்தால், வாழ்க்கையில் எந்த வகையாலும் அவர் முன்னேறியிருக்க முடியாது.

அந்தச் சூழ்நிலையும் பண்பும் இருந்த போதிலும், அவரிடம் இருந்த அறிவுத் திறனும் உழைக்கும் ஆற்றலுமே அவர் முன்னேறியதற்கு முக்கிய காரணமாகும்.

கண்டதை எல்லாம் திணித்து வைத்துக்கொள்ளும் நினைவாற்றலும் அவருக்கு இல்லை; தேவையானதைக் கொள்வதும், மற்றவற்றைத் தள்ளிவிடுவதுமே அவருடைய மூளையின் இயல்பாகும்.

எந்தப் போட்டித் திட்டத்திலும் ஷா கலந்து கொள்ள ஆசைப்பட்டதில்லை.

பரிசுகளும் பாராட்டுகளும் பெறவேண்டும என்ற ஆவலும் அவருக்கு ஏற்பட்டதே இல்லை.

"போட்டித் தேர்வுகளில் நான் கலந்து வெற்றி பெற்றாலும், தோற்றவர்களின் ஏமாற்றத்தைக் கருதி வருந்துவேன் நான் தோற்றுவிட்டாலோ என் கௌரவம் இழந்ததாக வருந்துவேன். பரிசு, பதக்கம் ஆகியவற்றால் என் மதிப்புச் சிறிது அளவாவது உயரும் என்று நான் நம்பவில்லை" என்று ஷா எழுதுகிறார்.

"நான் படித்த பள்ளிக்கூடத்தில் எதையும் கற்றுக் கொள்ள இயலவில்லை", எனக் குறிப்பிடுகிறார் ஷா.

## படிப்பதும் எழுதுவதும்

இயற்கையான கல்வியில் ஷாவுக்கு இருந்த ஆர்வம், லண்டனுக்கு வந்த பிறகு உரிய வாய்ப்பாக அமைந்தது.

லண்டன் பொருட்காட்சி நூல் நிலையத்துக்கு தினந்தோறும் போய், இடைவிடாமல் படிப்பதும் எழுதுவதும் அவருக்கு விருப்பமான கடமைகளாக ஏற்பட்டன.

இளமையில் கணக்கர் வேலை பார்த்து வந்த அனுபவத்தால், நாள்தோறும் ஏதேனும் படிப்பதும் எழுதுவதும், தவறாமல் செய்யவேண்டும் என்ற கொள்கை உண்டாகிவிட்டது.

ஆறு பென்னிக்குக் காகிதம் வாங்கி வைத்துக் கொண்டு நாள்தோறும் தவறாமல் ஐந்து பக்கங்கள் எழுதி வந்தார்.

அந்த முயற்சி, ஒரு பயனும் அளிக்காததைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் எழுதிவந்தார். ஊக்கம் இருந்தாலும், ஊக்கம் இல்லாவிட்டாலும், மழைக் காலமானாலும், குளிர்காலமானாலும் தவறாமல் ஐந்து பக்கங்கள் எழுதிவந்தார். ஒரு நாள் தடைப்பட்டு, எழுத இயலாமல் போனால் மறுநாள் அதையும் சேர்த்து இரண்டு மடங்காக எழுதி முடித்துவிடுவார்.

இத்தகைய திட்டத்தால், ஐந்து ஆண்டுகளில், ஐந்து நாவல்களை எழுதி முடித்திருக்கிறார்.

வறுமை வாட்டிய துன்பத்தை அவரால் மறக்க முடியவில்லை.

கிழிந்த பூட்சுகளைப் போட்டுக் கொண்டிருக்கிறார். சட்டையின் கை ஓரம் கிழிந்து கந்தலாகியதைக் கத்தரித்து, வெளியே தெரியாமல் சாமர்த்தியமாக அணிந்து கொண்டிருக்கிறார்.

தொப்பியோ பல ஆண்டுகளாக கையாளப்பட்ட பழம்பொருளாக இருந்ததால் முன்பின்னாக அதை மாற்றி அணிந்து கொண்டிருக்கிறார்.

ஆனாலும், வாழ்க்கைப் போராட்டத்தில் அவர் ஈடுபடவில்லை. ஆயினும், தாயை ஈடுபடச் செய்துவிட்டு, அவர் ஒதுங்கியே இருந்திருக்கிறார். தந்தைக்கும் அவர் உதவவில்லை.

குடும்பத்தில் அப்பொழுது இருந்த வறுமையோ விவரிக்க முடியாதது. அதனால், அவருடைய உதவியை குடும்பத்தில் எதிர்பார்க்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஆனால், அவருடைய ஏழைத் தாய் இளமையில் தாம் ஆசையோடு கற்றுக்கொண்ட இசைக்கலையை விற்று ஷாவின் செலவுக்குக் கொடுத்திருக்கிறார்.

தாயிடம் பணம் வாங்கிச் செலவு செய்துகொண்டிருந்த ஷாவை 'மனித இதயம் இல்லாதவன்' என்று நிந்தித்தவர்கள் பலர்.

"எப்படியோ நாள்தோறம் தவறாமல் எழுதிவந்த பழக்கத்தால், எவருக்கும் அடிமையாகாமல் தப்பித்தேன்.

தாயின் உழைப்பால் கிடைத்த பணத்தால் வாழ்ந்து, வளர்ந்து, என்னை மனிதனாக ஆக்கிக்கொண்டேன்" என்று கூறுகிறார்.

ஒன்பது ஆண்டுகள், 1876 முதல் 1885 வரை, லண்டன் தெருக்களில் ஷா அலைந்து திரிந்து கொண்டிருந்த காலத்தில் அவருடைய வறுமை மிகவும் கொடுமையாக இருந்தது.

ஒரே உடையையே எல்லாக் காலங்களிலும் அணிந்து செல்ல வேண்டிய நிலையில் இருந்தார்.

பகலில் அடிக்கடி வெளியில் செல்வதற்குக்கூட உடை இல்லாமல் இருந்தார்; அடுத்த நிறுவனத்துக்கு அனுப்புவதற்கு ஆறு பென்ஸ் தபால் செலவுக்கு இல்லாமல் ஏங்கியுள்ளார். ஆனால், அதற்காக அவர் சோர்ந்து விடவில்லை.

## எதிர்ப்பைக் கண்டு அஞ்சவில்லை

ஷா எழுதிய நாவல்களுக்கு மறுப்புகள் உண்டான போதிலும்கூட எழுதுவதை மட்டும் அவர் நிறுத்தவே இல்லை.

பத்திரிகை உலகில் எழுதும் வாய்ப்புக் கிடைத்தபோது, நாவல்கள் எழுதுவதை விட்டுவிட்டு, நாடகங்கள் எழுதத் தொடங்கினார்.

ஒரு பத்திரிகையில் ஓவிய விமரிசனம், மற்றொன்றில் மதிப்புரை எழுதும் வாய்ப்பு, இன்னொன்றில் இசையும் கலையும் பற்றி எழுதும் பொறுப்பு கிடைத்தன.

புனை பெயரால் 'ஸ்டார்' என்ற இதழுக்கு இசையைப் பற்றி பல கட்டுரைகள் எழுதினார்.

இவ்வாறு மெல்ல மெல்ல ஷா எழுத்தாளர் உலகில் தகுந்த இடத்தைப் பெறலானார்.

ஓரளவு பெயர் உண்டானபின், லண்டனில் உள்ள இரண்டு சிறந்த பத்திரிகை நிலையங்கள் அவரை அழைத்தன. அவரோ மறுத்துவிட்டார். அதற்குக் காரணம் கூறுகிறார்:

"முதலாவதாக, ஆசிரியரின் நண்பர்களான மற்றவர்கள் பெயர் பெறுவதற்காக நான் கட்டுரைகளும், குறிப்புகளும் எழுதித் தருவது எனக்குப் பிடிக்கவில்லை, இரண்டாவதாக, என் பெயரால் நான் எழுதும் கட்டுரைகளில் பத்திரிகை ஆசிரியரின் மனைவி தன் மனப்போக்குக்கு ஏற்றபடி, கலைஞர்களைப் பற்றி தவறான கருத்துக்கள் இடம்பெறும் வகையில் தம் குறிப்புக்களை இடையிடையே சேர்ப்பதை என்னால் பொறுத்துக்கொள்ள இயலவில்லை என்று கூறுகிறார்.

பத்து ஆண்டுகள் தொடாந்து நாடக அரங்குகளைப் பற்றி மதிப்புரை எழுதி வந்தார்.

ஷாவுக்கு 1898ல், பாதத்தில் ஒரு கட்டி கிளம்பி, இருமுறை அறுவை சிகிச்சை செய்துகொள்ள நேரிட்டது. அப்போது எல்லா வேலைகளையும் அவர் நிறுத்திவிட்டார்.

அப்போது வருமானம் நல்ல நிலையில் இருந்ததால் மதிப்புரையாளராக பத்திரிகைகளுக்கு அடிமைப்பட்டு எழுதும் தொல்லையை விட்டுவிட்டார்.

"இனி இந்த வேலையில் ஈடுபடுவதில்லை என்று உறுதி பூண்டேன். இனி, இதற்காக நாடக அரங்கத்திற்குள் நுழைய மாட்டேன். இந்தத் துறை இதோடு போதும். நானும் சலித்துபோய் களைப்படைந்து விட்டேன்" என்று அறிவித்தார்.

அவருக்குக் கிடைத்த வருமானம் ஒன்பது ஆண்டுகளுக்கு ஐந்தே பவுன்!

## வருமானம் வரத் தொடங்கியது

எழுத்தாளராக நல்ல வருமானம் பெறத் தொடங்கியது 1885ம் ஆண்டு முதல் எனலாம். அந்த ஆண்டில் மட்டும் அவருக்குக் கிடைத்த வருமானம் 112 பவுன்!

அதன் பின்னர், 1914–1915ல் உலகப் போர் நிகழ்ந்த சமயம், பணத்தொல்லை இல்லாமல் வாழத் தொடங்கினார், போர் முடிந்த பின்னர், வருமானம் பெருகியது. வறுமையின் கொடுமை அறவே விலகி, செல்வமும் சேர்ந்தது.

ஷாவின் முதல் நாடகம், 'மனைவி இழந்தவரின் வீடு' என்பதாகும். இது 1890ம் ஆண்டு வெளியாயிற்று. 1892ல் அது நடிக்கப் பெற்றது. ஆனால் வெற்றிபெறவில்லை.

அதே ஆண்டில் 'திருமதி வாரனின் தொழில்' என்ற அடுத்த நாடகம் வெளிவந்தது. ஆனால், அதை நடிக்கக் கூடாது என இங்கிலாந்தில் தடை விதித்தனர். அமெரிக்காவில் அதைப் படித்தவர்களின் மீது வழக்கு தொடரப்பட்டது.

## வெற்றி அளித்த நாடகம்

நாடக மேடையில் ஷாவுக்கு முதன் முதலாக வெற்றித் தேடித்தந்த நாடகம் 1894ல் எழுதி வெளிவந்த 'காண்டிடா' என்பதாகும். அந்த வெற்றி கிடைத்தது ஜெர்மனியில்.

அதன் பின்னர், ஷாவை அமெரிக்கா போற்றத் தொடங்கியது.

"மனிதனும் உயர்ந்த மனிதனும்" மேடைக்கு வந்த பிறகே, இங்கிலாந்திலும் அவர் வெற்றி கண்டார்.

இயற்கையாகவே, ஷாவின் உடல் உறுதியானது. அதனால், ஏதாவது ஒரு துறையில் உழைக்க வேண்டும் என்ற உந்துதல் இருந்து வந்தது. அதற்காக, ஒரு 'பட்டி மன்றத்தில்' உறுப்பினர் ஆனார்.

## நடுக்கமும் உளறலும்

அந்த மன்றத்தில் பல பொருள்பற்றி, பலர் பேசி வந்தனர். ஒருமுறை நிகழ்ந்த சொற்போரில் எதிர் பாராமல் ஷா எழுந்து நின்று ஏதேதோ பேசிவிட்டார். அப்பொழுது அவருடைய கைகால்கள் எல்லாம் நடுங்கின. தம்மை மறந்த நிலையில் என்னவோ பேசினார். பேசிமுடித்த பிறகே என்ன நடந்தது என்பது அவருக்குத் தெரிந்ததாம். தம்முடைய பைத்தியக்காரத்தனத்தை எண்ணி வருந்தினாராம்.

அப்பொழுதே ஓர் உறுதி செய்து கொண்டார். அந்த மன்றத்தின் ஒவ்வொரு கூட்டத்துக்கும் தவறாமல் போக வேண்டும்; பேச வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் பேசிவிட வேண்டும். அதனால் என்ன நேர்ந்தாலும் நேரட்டும் என்ற துணிவு கொண்டார். அவ்வாறே நடந்தார். பேசுவதற்கு வாய்ப்புக் கிடைக்குமுன் ஒவ்வொரு முறையும் அஞ்சி அஞ்சிச் கலங்கியிருக்கிறார். தாம் எழுதிக் கொண்டு சென்ற குறிப்புக்களையும் படிக்க முடியாமல் தடுமாறியிருக்கிறார். ஆயினும் தம்முடைய குறை பிறருக்குத் தெரியாதபடி நடித்திருக்கிறார்.

## திறமையான பேச்சாளர்

நாளடைவில் ஷா இல்லாத பட்டிமன்றமும், பேசாத கூட்டமும் இல்லை என்னும் நிலை உண்டாயிற்று.

ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையிலும் பத்து கூட்டங்களில் ஷா பேசிய காலமும் உண்டு.

ஆரம்ப காலத்தில், அவர் சொன்ன கருத்துக்களைக் கேட்பவர் யாரும் இல்லை. ஆனால், முதுமைக் காலத்தில் அவருடைய ஒவ்வொரு சொல்லுக்கும் உலகமே காத்திருந்தது.

முன்பு, தம் கருத்துக்களை யாரிடமாவது சொல்ல வேண்டும் என்ற ஆவல் எழுந்தபோது அவர் 'ஹைட்பார்க்' என்னும் இடத்துக்குச் சென்று வந்தார். ஒரு முறை, அவர் பேச்சைக் கேட்டவர்கள் யார்? புல் தரையில் மல்லாந்து படுத்துக் கொண்டிருந்த தெருவில் அலையும் சோம்பேறிகள்; அவர்களில் ஒருவன் "கேளுங்கள், கேளுங்கள்" என்று கூறினானாம்.

மற்றொரு முறை, அதே இடத்தில் ஷா பேசியபோது ஆறு பேர்கள் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யார்? ஷாவைக் கண்காணிக்க அனுப்பப்பட்ட காவல் துறையினர்! அதனால் மழை பெய்த போதிலும், அந்த இடத்தை விட்டு நகராமல், ஒன்றரை மணிநேரம் நின்று கொண்டே கேட்டுக் கொண்டிருந்தார்களாம்.

இவ்வாறு, முயன்று நன்றாகப் பேசக் கற்றுக்கொண்டார் ஷா. அவர் பின்னர் சிறந்த சொற்பொழிவாளர்களில் ஒருவராக புகழ்பெற்று விளங்கினார்.

நேரில் பேசுவதுபோல அவர் பேச்சு முறையும் அமைந்திருந்தது. பட்டிமன்றங்களில் மிகச் சுலபமாக வெற்றி பெற்றார். சொல் ஒவ்வொன்றும் கேட்போர் மனத்தைக் கவர்ந்தது. இராணுவ வீரர்போல் நேராக நின்று, கைகளை உயர்த்தி, தலையை அசைத்துப் பேசி வந்தார்.

சிறந்த சொற்பொழிவாளர்களான ஹிலரி பெல்லாக், செஸ்டர்டன் ஆகியோர் அக்காலத்தில் லண்டனில் இருந்தார்கள். அவர்களோடு ஷா நிகழ்த்திய சொற்பொழிவுகள் அப்பொழுது சிறப்புமிக்க நிகழ்ச்சிகளாக இருந்தன.

பல பட்டிமன்றங்களில் கலந்து கொண்டார்; பல வகையான நூல்களையுும படித்துத் தேர்ந்தார். பேராசிரியர் இப்ஸனின் நூல்களையும் விரும்பிப் படித்தார்.

## அறிவியலும் பொருளாதாரமும்

அக்காலத்தில், ஷாவின் சொற்பொழிவு பெரும்பாலும் அறிவியலுக்கும், சமயத்திற்கும் உள்ள வேறுபாட்டைப் பற்றியதாகவே இருந்தது.

ஒரு சமயம் ஹென்றி ஜார்ஜ் என்னும் அமெரிக்கரின் ஆழ்ந்த நுட்பமான சொற்பொழிவைக் கேட்ட பிறகே ஷாவின்

பேச்சு, சிறிது சிறிதாக பொருளாதாரத்துறைக்குத் திரும்பியது.

ஷாவே ஒரு கூட்டத்தில் பேச முற்பட்டார். அப்பொழுது அங்கே ஒருவர் "கார்ல் மார்க்ஸ்" எழுதிய 'மூலதனம்' (Capital) என்ற நூலைப் படிக்காதவர்கள் பொருளாதாரத்தைப்பற்றி பேச முன்வரக்கூடாது என்று சொன்னார். அவரே ஷாவின் மனத்தை மாற்றியவர்.

ஷா உடனே லண்டன் பொருள்காட்சி நூல நிலையத்துக்குச் சென்று 'மூலதன' நூலில் ஆழ்ந்துவிட்டார். 'மார்க்ஸின் கருத்து எனக்கு புது விளக்கமாகக் காணப்பட்டது அதுதான் என் வாழ்க்கையின் திருப்பம்' என்று கூறுகிறார் ஷா.

## பொதுவுடைமைக் கொள்கை

அடுத்த கூட்டத்துக்கு ஷா சென்றபோது, அங்கே தாமும் இன்னொருவரும் தவிர, யாருமே மார்க்ஸின் நூலைப் படிக்கவில்லை என்பதை அறிந்து கொண்டாராம்.

அந்த நூலைப் படித்த பிறகே புதிதாக நிறுவப்பட்ட பேபியன் சங்கத்தில் சேர்ந்து தொண்டாற்றினார். மேலும் அங்கே தலைவராக அமர்ந்து பொதுவுடைமைக்

கொள்கைகளைப் பரப்புவதற்காகப் பேசியும் எழுதியும் உழைத்து வந்தார்.

பிற்காலத்தில் அவர், கார்ல் மார்க்ஸ் எழுதிய எல்லாவற்றையும் ஏற்காமல் சிலவற்றில் கருத்து வேறுபட்டார். ஆயினும், "வரலாறு நாகரிகம், வாழ்க்கை முதலிய பலவற்றிலும் என் கண்ணைத் திறந்தவர் மார்க்ஸ்தான்" என்று பெருமையாகக் கூறுகிறார் ஷா.

ஷா எந்த ஆசிரியருடனும் முழுதும் உடன்படுவதில்லை. அதைப்போலவே, கார்ல் மார்க்ஸுடனும் முழுதும் உடன் பட்டதில்லை. தம்முடைய பல கருத்து வேறுபாடுகளைச் சில நூல்களின் முகவுரைகளில் விளக்கி எழுதியுள்ளார்.

## இடையறாத உழைப்பு

இரவும் பகலுமாக, பல துறைகளிலும் உழைத்து இருபது ஆண்டுகள் பாடுபட்டார். அப்பொழுது பல நூல்களைக் கற்று, அறிவை வளர்த்தார். உக்கம் மிகுந்தவராய் உழைத்தார். பலவற்றைப்பற்றி இடைவிடாமல் குறிப்புகள் சேகரித்துக் கொண்டார்.

பன்னிரண்டு ஆண்டுகள் பல கூட்டங்களில் பேசினார் ஆனால் பேச்சுக்களால் அவர் கண்டது என்ன? அலுப்பையே

கண்டார். பொதுமக்கள் கூடி, அவருடைய பேச்சுக்களைக் கேட்டு, கைதட்டிப் புகழ்ந்தார்கள். அமைதியாக தங்கள் வீடுகளுக்குத் திரும்பிச் சென்றார்கள். பேச்சால் விளைந்தவை இவையே.

## ஆட்சி எவ்வாறு அமைய வேண்டும்?

ஷா எதிர்பார்த்தபடி, எவரும் முன்னேற்றத்துக்கான முயற்சிகளைச் செய்யவில்லை. அவர்கள் என்ன செய்வார்கள்? அவர்களைக் குறை சொல்லிப் பயன் என்ன? நாள்தோறும் வயிற்றுப் போராட்டத்திற்காக பாடுபடும் மக்களுக்கு முன்னேற்றத்தை எண்ணிப்பார்க்க நேரம் உண்டா? இதனால் ஷா கொண்டிருந்த நம்பிக்கை தளர்ந்து, குடியாட்சி முறையில் குறை கண்டார். மக்களுக்காக, மக்களால் நடைபெறும் மக்களாட்சியே குடியாட்சி என்பது இயலாத காரியம் என அவர் கண்டார். அது மக்களாட்சியாக – மக்களுக்காக நடைபெறும் ஆட்சியாகவும் இருக்கும். ஆனால், மக்களால் நடைபெறும் ஆட்சியாக மட்டும் இருக்க முடியாது; பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பொறுப்பு ஏற்ற அறிஞர் சிலரால்தான் நடைபெற முடியும்; பொது மக்களை வற்புறுத்தி முன்னேற்றினால்தான் வழி உண்டு என்பனவற்றை அவர் உணர்ந்தார்.

அவ்வாறு அவர்கள் ஆட்சி செலுத்தும்போது, உழைத்தால்தான் உணவு உண்டு என்னும் கொள்கையோடு

நிற்காமல், உழைத்தால்தான் உயிர்வாழ முடியும் என்று வற்புறுத்தும் அளவுக்கச் சென்று எல்லோரையும் உழைத்து, தொழில் புரியுமாற கட்டாயப் படுத்தி, ஆட்சிபுரிய வேண்டும் என்று தெளிவாக விளக்கியுள்ளார் ஷா.

## ஷாவுக்கு புதுத் தொடர்பு

பேபியன் சங்கத்தில் ஷா சேர்ந்தபிறகு, வெப்ஸ் குடும்பத்தார் அவருக்கு நெருங்கிய நண்பர்கள் ஆனார்கள்.

லண்டனில் பொருளாதாரக் கல்வி நிலையத்தில் படித்துக் கொண்டிருந்த டவுன் ஷெண்ட் என்னும் இளம்பெண் வெப்ஸ் குடும்பத்துக்கு அடிக்கடி வந்து போய்க்கொண்டிருந்தாள்.

1897ல் வெப்ஸ் குடும்பத்தில் அந்தப் பெண் தங்கியிருந்தபோது ஷாவும் அங்கே தங்கியிருந்தார், இருவருக்கும் பழக்கம் உண்டாயிற்று.

'ஷா ஒரு விந்தையான மனிதர்' என்று அவள் அடிக்கடி கூறிவந்தாள்.

1897ல் அவர்களின் பழக்கம் முற்றி, அவள் ஷாவின் செயலாளராக ஆகிவிட்டாள். ஷா சொல்லும் விஷயங்களை எழுதுவதும், ஷாவின் களைப்புத் தீர துணைபுரிவதும் அவளுடைய கடமைகள் ஆகிவிட்டன.

அவள் தங்கியிருந்த மாடியில் ஷா அடிக்கடி போய் காலம் கழித்தார். வெளியே நடந்து சென்றபோது இருவரும் சேர்ந்தே சென்று வந்தார்கள். ஷா வேகமாக நடப்பவர். ஆகையால், "எக்ஸ்பிரஸ் வண்டிபோல் நடக்காதீர்கள்" என்று அவள் அடிக்கடி சொல்லி ஷாவின் வேகமான நடையைக் கட்டுப் படுத்தலானாள்.

1898, மார்ச் மாதம், வெப்ஸ் குடும்பத்தினர், உலகப் பயணம் செய்யப் புறப்பட்டனர். அவர்களுடன் இளம் பெண் டவுன் ஷெண்ட்டும் புறப்பட்டாள் அவர்கள் எல்லோரும் ரோம் நகரத்தில் தங்கி இருந்தார்கள்.

## நோயால் துன்புற்றார்

அந்தச் சமயத்தில் ஷா நோய்வாய்ப்பட்டு, மிக வேதனையான நிலையில் இருப்பதாக வெப்ஸ் குடும்பத்தினருக்குத் தந்தி கிடைத்தது.

அதை அறிந்த டவுன் ஷெண்ட் உடனே அடுத்த வண்டியில் லண்டனுக்குத் திரும்பினாள்.

## பரிதாபமான சூழ்நிலை

அப்பொழுது நோயாளியாய் ஷா தங்கியிருந்த அறை மிகச் சிறியது. தூசி படிந்து, குப்பை கூளங்களுடன்

ஒழுங்கற்று இருந்தது. புத்தகங்கள் தூசி படிந்து கிடந்தன. வேலைக்காரி வேளைக்கு உணவு கொண்டுவந்து, எட்டி நின்றபடியே மேஜைமீது வைத்து விட்டுப் போய்விடுவாள். ஷாவின் தாயோ அந்தப் பக்கம் வருவதே இல்லை. தாய்க்கும் மகனுக்கும் ஒரு வகையான வெறுப்பு இல்லை என்ற போதிலும் ஒருவர் பிரிவுக்கு மற்றவர் கவலைப்பட்டதே இல்லை. இத்தகைய வாழ்க்கையில் அவர்கள் ஒருவரை ஒருவர் காணாமலே பல நாட்களைக் கழித்தார்கள். ஷாவின் சகோதரிகளோ திருமணம் ஆனபின் தாய் வீட்டுக்கு அடிக்கடி வருவதில்லை.

இந்நிலையில், பாதத்தில் கிளம்பிய கட்டி ஆறாமல் ஷா துன்புற்று வாடிப்போனார். அறுவைச் சிகிச்சை நடைபெற்றது. ஊன்றுகோல் கொண்டு நடக்க வேண்டியிருந்தது. அந்த நிலையில்தான் ஷாவின் காதலியான டவுன்ஷெண்ட் வந்து கண்டாள். அந்த அறையில் அத்தகைய நிலையில் ஷாவை வைத்திருந்தால் உயிருக்கு ஆபத்தாக முடியும் என அஞ்சி, உடனே தன்னுடைய பண வசதியைக்கொண்டு வேறு இடத்தில் வீடு பார்த்து ஏற்பாடுகள் செய்து அவரைக் காப்பாற்ற முற்பட்டாள். ஷாவின் தாய் அதற்கு மறுப்பு எதுவும் கூறவில்லை. ஆனால் ஷா அதற்கு இசையவில்லை. தமக்காக ஒரு பெண் கெட்ட பெயர் தேடிக்கொள்வதற்கு அவர் உடன்படவில்லை.

## திருமணத்துக்குக் காரணம்

உள்ளத்தில் உணர்ந்ததை அப்படியே செயலில் காட்டும் கொள்கையுடையவர் அல்லவா? ஆகவே ஒன்று திருமணம் செய்துகொண்டு அவளுடன் செல்வது; அல்லது தனியே அந்த அறையில் கிடந்து வருந்துவது என்று எண்ணினார். முடிவில் திருமணமே சிறந்ததாகத் தோன்றியது அவருக்கு. "அதுவும் என்னைக் கருதி அல்ல, அவளைக் கருதியே!" என விளக்கிக் கூறுகிறார்.

டவுன்ஷெண்டை அழைத்து, "ஒரு மோதிரம் கொண்டு வா; திருமணத்துக்கான நாள் குறிப்பிடு; பிறகு உன்னுடன் வருகிறேன்" என்றார்.

அவளும் சம்மதித்தாள். 1898ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் தேதியில், புது இடத்துக்குப் போகும் வழியில் திருமணப் பதிவு நிலையத்தில் இருவருக்கும் திருமணப் பதிவு நடைபெற்றது. அவருடைய நண்பர்கள் இருவர் சாட்சிகளாக வந்திருந்தனர்.

புதிய இடத்தில், போதிய வசதிகளுடன் ஷா கவனிக்கப்பட்டார். மனைவி அன்போடும், ஆர்வத்தோடும் உதவிபுரிந்து காப்பாற்றி வந்தாள்.

அப்பொழுது ஷா மாடியிலிருந்து தவறி விழுந்து இடதுகை மணிக்கட்டின் பகுதியில் எலும்பு முறிந்து, மீண்டும் மூன்று வாரம் துன்புற்றார். பின்னர், உடல்நலம் அடைந்தார்.

சில வாரங்களுக்குப் பிறகு மறுபடியும் விழுந்து கணைக்கால் முறிந்து அவதிப்பட்டார்.

மருத்துவர்கள் ஷாவின் மரக்கறி உணவை இகழ்ந்து குறை கூறிக்கொண்டிருந்தார்கள்.

சில மாதங்களில், குணம் அடைந்து, நல்ல வீட்டில் மனைவியோடு இல்வாழ்க்கையைத் தொடங்கினார்.

## குறையும் நிறையும்

எல்லோரும் ஷாவிடம் கண்ட பெரிய குறை என்ன? கர்வம் மிக்கவர்: கிறுக்குத்தனமானவர் என்பதே!

ஷா எவ்வளவுதான் அகந்தை கொண்டிருந்தாலும் கிறுக்குத்தனமாகப் பேசினாலும், எழுதினாலும் அவரை எவருமே வெறுத்ததும் இல்லை; எதிர்த்ததும் இல்லை; மறுத்ததும் இல்லை. எல்லோரும் அவரோடு சேர்ந்து சிரித்தார்கள். ஆனால் அவரைப் பார்த்துச் சிரிக்கவில்லை. அவருக்கு நிகராக எவரும் தோன்றவில்லை. அத்தகைய மேதை அவர்! எல்லாவற்றிலுமே அவர் போக்கு தனியானது!

ஷாவிடம் கருத்து வேற்றுமைகள் பல காணலாம். அவர் கூறுவதை எல்லாம் அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது. அவர் எதை உணர்ந்தாரோ அதையே சொன்னார்;

துணிவோடு சொன்னார். உள்ளொன்று வைத்து புறமொன்று பேசி, அவரால் நடிக்க இயலவில்லை.

'தம்முடைய நூல்கள் யாவும் அரியவை, சிறந்தவை' என்று உணர்ந்தே எழுதினார். ஆகையால், அவற்றை தாமே புகழ்ந்து கொண்டார்.

ஷேக்ஸ்பியரைக் குறை கூறியபோதிலும், குணம் கண்ட போது அவரைப் புகழ்ந்தார் ஷா. ஷேக்ஸ்பியர் பெருமையை நிலைநாட்டும் வகையில், அவர் நினைவுக்காக, அவர் பெயரால் நாடக அரங்கு ஒன்று நிறுவ பெரு முயற்சி செய்தார் ஷா. அதற்காகவே ஒரு நாடகமும் எழுதினார்.

வில்லியம் டேவிஸ் என்னும் கவிஞரைப்பற்றி எழுதி அவரை உலகம் அறியுமாறு செய்தார்.

அறிஞர் எச்.ஜி. வெல்ஸை தாக்கி எழுதினாலும் சில இடங்களில் அவரைப் புகழ்ந்தும் எழுதியுள்ளார்.

இப்படியாக, அறிஞர்களிடம் நல்லன கண்டபோது தயங்காமல் போற்றியிருக்கிறார்; சிறப்பித்தும் எழுதியிருக்கிறார்.

## நாடகத்திலே விருப்பம்

'ஷாவின் மூளையானது எல்லாவற்றையும நாடகக் காட்சியாகவே எண்ணிப் பழகிவிட்டது. ஆகையால்,

எதையேனும் நன்கு விளக்க வேண்டும் என்று ஷா கருதினால், உடனே அதைச் சிறிய ஓரங்க நாடகமாக அமைத்துத் தெளிவாகக் காட்டுவது அவர் வழக்கமாகும்.

“எதையும் நாடக அமைப்பில் விளக்குவது, எனக்கு மிகவும் எளிதாக இருக்கிறது; மிகவும் நல்ல முறையாகவும் இருக்கிறது” என்று ஷா கூறுகிறார்.

ஷா, நாடகத்தை எழுதி முடித்ததும், அதில் ஒரு வரியைக்கூட எவரையும் திருத்த அனுமதிக்கமாட்டார்.

திருத்தம் அல்லது மாற்றம் என யாரேனும் தெரிவித்தால் அது நல்லது என்று அவருக்குத் தோன்றினால், உடனே திருத்தியோ, மாற்றியோ அமைத்து விடுவார். ஆனால், அதே சமயம் அதைத் தாமே செய்ய வேண்டும் என்ற கண்டிப்பும், உறுதியும் உள்ளவர்.

ஷேக்ஸ்பியர் துன்பியல் நாடகங்களை எழுதிப் புகழ்பெற்றார். ஷா இன்பியல் நாடகங்களை எழுதியே புகழ் பெற்றார்.

## அமெரிக்கர்கள் தந்த ஆதரவு

ஷா நாடகங்கள் எழுதிப் பணம் திரட்டியதெல்லாம் அமெரிக்காவில்தான். அமெரிக்கர்கள் அவருடைய பல நாடகங்களைச் சலிப்பின்றிக் கண்டு போற்றினார்கள்.

அதன் பிறகே, அவ்வருடைய நாடகங்கள் பொருள் தேடிக் கொடுத்தன.

நாடகங்களை வெற்றிகரமாக நடத்துவதில் ஷா மிகவும் அக்கறை எடுத்துக் கொண்டார். நாடகங்களை எழுதுவதற்கான நேரத்தைவிட ஒத்திகைகள் நடத்துவதிலும், பார்ப்பதிலுமே அதிக நேரத்தைச் செலவிட்டார் ஷா.

எல்லோரையும் மகிழ்வித்துத் திருப்திப்படுத்தும் வகையில் அவரால் எழுத இயலவில்லை.

ஷாவின் நாடகச் சிறப்பை, நீண்ட நாடகள் வரையில் நடிகர்களும் உணரவில்லை; ஆராய்ச்சியாளரும் உணர வில்லை. ஆனால் அவர் சோர்வடையாமல் எழுதி வந்தார்.

ஷா முதலில் எழுதிய நாடகங்களை, அவை நாடகங்களே அல்ல என்று குறைகூறினார்கள். ஷா அதைக் கண்டு தளர்ந்துவிடவில்லை. தாம் எழுதுகின்றவை ஆராய்ச்சிகள், உரையாடல்கள் என தாமே கூறிப் புகழ்ந்துகொண்டார்.

கொலைகளும், கொடுமைகளும் இருப்பதே சிறப்பான நாடகம் என்றால், அத்தகைய நாடகங்களை எழுதுவது என் தொழில் அல்ல என்று அறிவித்தார்.

1885ல் எழுதிய சில நாடகங்களை ஷா ஒதுக்கி வைத்து, மறந்துவிட்டார். ஏழு ஆண்டுகள் கழித்தே அவை மீண்டும் நாடக மேடைக்கு வந்தன.

## நாடகத்தில் சிரத்தை

பல நாடகங்களை எழுதி அரங்கேற்றிய ஷா, ஒரே ஒருமுறை நடித்திருக்கிறார் என்றால் ஆச்சரியமாக இல்லையா?

கார்ல் மார்க்ஸின் மகள் ஒரு நாடகத்தில் நடித்தபோது, அவளுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, ஷாவும் அதில் நடித்தார்.

ஒரு நாடகத்தை எழுதி முடித்ததும், அதை நெருங்கிய நண்பர்களிடம் படித்துக்காட்டுவது ஷாவின் வழக்கம். அதற்கு அடுத்தபடியாக, நாடகம் நடத்துபவர்களுக்கும் மற்றவர்களுக்கும் படித்துக்காட்டுவார். அவ்வாறு அவர் படித்துக்காட்டுவதைக் கேட்கவும், காணவும் உற்சாகமாக இருக்கும்.

ஷாவே ஒவ்வொரு பாத்திரமாக மாறி, மாறி நடித்துப் பேசுவதுபோல் இருக்கும்.

## நாடகங்களிலே கவர்ச்சி

ஷாவின் குரல் வேறுபாடும், பேசும் முறையும் நாடகத்தின் கருத்தையும் அமைப்பையும் நன்றாக எடுத்துக் காட்டும்.

நடிகர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, தினந்தோறும் ஷாவே உடன் இருந்து ஒத்திகை நடத்தி உதவி செய்திருக்கிறார்.

எல்லாம் முடிந்த பிறகு குறிப்புப் புத்தகம் ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு எதிரே போய் மௌனமாக உட்கார்ந்திருப்பார். நடிகர்களின் நடிப்பை நன்றாகக் கவனித்து, விடாமல் குறித்துக்கொள்வார். முடிவில் அவர்களிடம் சென்று தவறான இடங்களை எடுத்துக்காட்டி திருத்துவார். மேலும் தானே நடித்தும் பேசியும் காட்டுவார். திருத்தும்பொழுது பொறுமை, அன்பு, இன்சொல் ஆகிவற்றைக் கடைப்பிடிப்பார். நடிகர்களின் உடைகளிலும் கூட கவனம் செலுத்துவார்.

வெறும் கட்டுரைகளை எவரும் படிப்பதில்லை. ஆகையால், தம் கொள்கையை உணர்த்தி, அவர்களைத் திருத்த வேறு வழி இல்லாததைக் கண்டு, நாடகங்களின் வழியாகக் கவர்ச்சியை ஊட்டி, முகவுரைகளின் மூலம் கொள்கைகளை உணர்த்தும் முயற்சியில் ஈடுபட்டார் ஷா. அதனால், நாடகங்களைவிட நீண்ட முகவுரைகளை எழுதி வெளியிடுவது அவருக்கு வழக்கமாகி விட்டது.

கலை உலகுக்கு அப்பாற்பட்டு நட்பு முறையில் பழகியவர்களுடன் மிகவும் அன்போடு ஷா பழகி வந்தார்; அவரோடு பழகியவர்களுக்கு அவரை விட்டுப் பிரிவது வருந்தக்கூடிய நிலைமையாகும்.

## சகலமும் அறிந்தவர்

எல்லாவற்றையும் பேசக்கூடிய திறமைசாலி. அதனால் அவருக்கு தேனீர் விருந்துகள் காத்திருக்கும், யாருடனாவது அவர் பழகினார் என்றால், அந்த வீட்டுச் சிறுவர், சிறுமியருக்கு ஏற்ற பள்ளிக்கூடம் எது என்று சொல்வார்; அந்த வீட்டாருக்கு தகுந்த உணவு முறைகளைக் கூறுவார். குடும்பச் சிக்கல்களுக்கு வழக்கறிஞரைப்போல் ஆலோசனை சொல்வார்; மதத் தலைவரைப் போல் நீதிநெறிகளை எடுத்துக்கூறுவார்; மருத்துவரைப் போல் உடல்நிலைக்கு ஏற்ற முறைகளைச் சொல்லுவார்; தையல் கலைஞரைப் போல் பொருத்தமான உடை வகைகளைத் தெரிவிப்பார். பிறகு குழந்தைகளோடு சேர்ந்து அவர்களைப் புரட்சிக்குத் தூண்டிவிடுவார்; அதுவும் முடிந்த பின்னர், வேறு எதுவும் இல்லையென்றால், எளிதில் எல்லோரையும் மறந்து வெளியே நகர்ந்து விடுவார். அவரால் சிறிது நேரம் கூடச் சும்மா இருக்க முடியாது. நோயுற்றுப் படுத்துக் கிடக்கும்போது தவிர மற்ற நேரங்களில் எதையாவது செய்து கொண்டிருக்கும் சுறுசுறுப்புத் தன்மை உடையவர்.

## நன்றி உணர்வு

நன்றி மறவாமல் அன்பு செலுத்தக் கூடியவர் ஷா, பிராங்க் ஆரீஸ் என்பவர் "சாட்டர்டே ரிவ்யூ" என்னும்

பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். நாடகங்களுக்கு மதிப்புரை எழுதுவதற்காக ஷாவை அவர் நியமித்துக்கொண்டார்; அப்போதுதான் G.B.S. (ஜார்ஜ் பெர்னார்ட்ஷா) என்ற மூன்று எழுத்துக்கள் ஷாவைக் குறித்து உலகம் முழுவதும் அறிய முற்பட்டன. ஷாவின் புகழ் பரவுவதற்கு முதன் முதலில் ஆரீஸ் காரணமாக இருந்தார்.

பல ஆண்டுகளுக்குப் பிறகு ஷா, ஆரீஸுக்கு எழுதிய கடிதத்தில், "இந்த உலகத்தில், எந்தப் பகுதியிலாவது நீங்கள் ஒரு பத்திரிகைக்கு ஆசிரியராக இருக்கும் வரையில் அந்தப் பத்திரிகையில் என்னுடைய கட்டுரைகள் வெளிவரும் என்று நீங்கள் தயங்காமல் எதிர்பார்க்கலாம்" என்று தம்முடைய நன்றி உணர்வை வெளிப்படுத்தினார்.

ஷாவை உலகுக்கு அறிமுகப்படுத்திய அந்த ஆரிஸ் பிற்காலத்தில் வாழ வழியின்றி துன்புற்றார். பத்திரிகைத் தொழிலில் அவருக்கு இடம் இல்லாமல் வருந்தினார்.

ஆஸ்கார் ஒயில்டைப் பற்றியும், ஷாவைப் பற்றியும் வரலாறுகள் எழுதிப் பணம் சேர்க்கலாம் என்ற முயற்சியில் ஆரிஸ் ஈடுபட்டு வந்தார். முயற்சி முடிவடையும் முன் வறுமையில் வாடி, வருந்தி, இறந்து போனார்.

அந்த வரலாற்று நூல்கள் இரண்டையும் ஷா பார்த்துத் திருத்திக் கொடுத்து, அவை உண்மையான நூல்கள் என

சான்று அளித்து, ஆரிஸின் மனைவிக்காவது உதவியாக இருக்கட்டும் என்று முயன்றார். தாமே திருத்திய தம்முடைய வரலாற்றைப்பற்றி ஒருவரிடம் குறிப்பிட்ட போது, "ஆரிஸ் எழுதிய ஷாவின் சுயசரிதம்" என்று கூறினார்.

## வேடிக்கை மனிதர்

ஷா எப்பொழுதும் எளிமையாகவே இருக்க விரும்புவார். அவருடைய உணவு, உடை ஆகியவற்றில் எளிமை விளங்கும், தம் தோட்டத்தில் விளைந்த காய்கறிகளையும் பழங்களையும் உணவாகக் கொள்வார்.

மது, மாமிசம், புகை முதலான எதையும் அவர் தீண்டியதே இல்லை.

பெரும்பாலோருக்குப் புரிந்துகொள்ள முடியாத புதிரான மனிதராகவே ஷா விளங்கினார். அவருடைய வேடிக்கையான பேச்சும், கிண்டலும் அவருடைய பெருந்தன்மையை மூடிமறைத்து விட்டன. எள்ளி நகையாடும் சொற்களால் பிறரைத் தாக்குவதையே ஒரு கலையாக அவர் கொண்டிருந்ததால், அவர் இரக்கமற்றவர் என்று பலரும் எண்ணி விட்டார்கள். அவரோடு பல ஆண்டுகள் பழகிய எல்லென் அம்மையார் "நல்லவர், அன்பானவர், பெருந்தன்மையானவர்" என ஷாவைப் பற்றிக் குறிப்பிடுகிறார். ஆனால் இது பலரும் நம்ப முடியாத பாராட்டாக – வியப்பாக இருக்கிறது.

## தினசரிக் கடமை

தினமும் ஐந்து பக்கங்கள் எப்படியும் எழுதிவிடுவார் ஷா. அதை ஒரு தினசரிக் கடமையாகவே கொண்டிருந்திருக்கிறார்.

ஏதோ அசௌகரியத்தால் ஒரு நாள் எழுத இயலாமல் போனால், மறுநாள் அதையும் சேர்த்து எழுதிவிடுவது வழக்கம்.

## பழக்கவழக்கம்

தமக்கு வரும் கடிதங்களுக்கு உடனுக்கு உடன் பதில் எழுதி விடுவது அவருடைய பழக்கம். எழுதியக் கடிதங்களை தாமே அஞ்சல் நிலையத்துக்குப் போய், பெட்டியில் போட்டு வருவரையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்.

## அலங்கோலமான அறை

ஷா தங்கி இருந்த அறை மிகச் சிறியது; கண்ட இடம் எல்லாம் தும்பும், தூசியும் படிந்திருந்தன. எல்லாம் ஒழுங்கு இல்லாமல் கிடந்தன.

பகல், இரவு, பனிக்கலால், குளிர்காலம், எதுவானாலும் எப்பொழுதுமே ஜன்னலைத் திறந்தபடியே வைத்திருபபது ஷாவின் வழக்கம். அதனால் தூசி வெளியிலிருந்து வந்தபடியே இருந்தது.

மேஜைமீது குப்பைபோல் தாள்கள் கிடந்தன. வந்த கடிதங்களும், தபால் உறைகளும், பேனாக்களும், செய்தித் தாள்களும் அவற்றோடு கத்திகளும், கரண்டிகளும், பழங்களும் சர்க்கரையும் வெண்ணெயும் கலந்து கிடந்தன.

யாராவது அவற்றை ஒழுங்குப்படுத்த முன் வந்திருப்பார்கள். ஆனால், ஷாவின் தாள்களை யாரும் தொடக்கூடாது; எடுக்கவும் கூடாது.

மேஜை, தட்டச்சுப் பொறி, நாற்காலி இவையே அந்த அறையை அடைத்துக் கொண்டிருந்தன.

எப்பொழுதாவது ஒருமுறை அதைச் சுத்தப்படுத்தி, ஒழுங்கு செய்வதும் உண்டு. அதற்கு இரண்டு முழு நாட்களின் உழைப்பு வேண்டியிருக்குமாம். அந்த இரண்டு நாட்களே ஷாவின் மூளைக்கு ஒய்வு நாட்கள்.

ஏதேனும் ஒரு புத்தகத்தை ஷா படிப்பதாக இருந்தால் அந்தப் புத்தகம் திறந்தபடியே மேஜை மீது இருக்கும்.

அவர் உடை அணியும் போதும் அதைக் களையும் போதும், மற்ற சிறு வேலைகளில் ஈடுபடும்போதும், திறந்திருக்கும் பங்கங்களைத் தள்ளித் தள்ளிப் படிப்பாராம். அதைப் படித்து முடித்த பிறகே அந்தப் புத்தகம் மூடப்படும். அதற்கு மத்தியில் வேறு ஒரு புத்தகத்தைப் படிப்பதானால் அதுவும் கூட அருகில் திறந்து வைக்கப்பட்டிருக்கும்,

இப்படியாக,. பல புத்தகங்கள் மேஜைமீது திறந்தவாறு தூசு படிந்தபடியே கிடக்கும்.அவருடைய விருப்பம்

ஷா மது அருந்துவது இல்லை, புலால் உண்பதில்லை, சுருட்டு புகைப்பது இல்லை தோட்டத்தில் விளையும் காய்கறிகளையே பயன்படுத்தவார். இயற்கை உணவுகளையே பெரிதும் விரும்புவாார். இயற்கைச் சிகிச்சை முறைகளிலே மிகவும் ஆர்வம் கொண்டவர். ஒலி, உச்ரிப்பு முறை, ஆண்–பெண் கூட்டு வாக்குரிமை இவற்றை ஆதரிக்கிறவர்.

## கலங்காதவர்

பிறவியிலேயே ஷா, துன்பத்தை இன்பமாக மாற்றிச் சிரித்திடும் இயல்புடையவராக விளங்கினார்; தம்முடைய வறுமையை வேடிக்கைான பேச்சுக்களுக்குப் பயன் படுத்திக் கொண்டு மகிழ்ந்து காலம் கழித்தவர். தம்முடைய துன்பத்துக்கோ, மற்றவர்களுடைய துன்பத்துக்கோ கலங்கி கண்ணீர்விடும் வழக்கம் இல்லாதவர்.

உலக வாழ்க்கையின் துன்ப நிகழ்ச்சி எதுவும் அவருடைய உள்ளத்தைக் கலங்கச் செய்யவில்லை. கடமை உணர்ச்சியையும், வேடிக்கைப் பேச்சையுமே தூண்டிவிட்டன.

## புகழைக் கண்டு மயங்காதவர்

தமக்கு உண்டான உலகப் புகழைக் கண்டு ஒருபோதும் மயங்காதவர் ஷா.

ஷாவின் தன்மைகள், செயல்களில் மட்டும் அல்லாமல் எண்ணங்களில், எழுத்துக்களில் மாறுபட்டு, பொது மக்களின் சிந்தனைக்கு எட்டாமல் காணப்பட்டார் அவர்.

ஷாவின் 90–வது பிறந்த நாள் காலையில், பத்திரிகையாளர் மற்றும் பலர் அவருக்கு வாழ்த்துக்கூற, அவர் வாழ்ந்த கிராமத்துக்கு வந்து காத்திருந்தனர்.

ஷா வழக்கம் போல் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டார்; செய்தித்தாள்களைப் படித்தார்.

வெளியே வந்து எல்லோரையும் புன்முறுவலோடு பார்த்தார்.

அப்படியே அங்கிருந்தவர்களை விலக்கிக்கொண்டு தம்முடைய ரோல்ஸ் ராய்ஸ் காரில் ஏறி, ஓட்டுநரின் அருகில் அமர்ந்து எங்கோ மலைப்பக்கமாகச் சென்று விட்டார்.

அவருடைய வீட்டிலிருந்த எவருக்குமே ஷா தம்முடைய வயதைப் பற்றிச் சொல்லவில்லையாம். அந்தக் கிராமத்திலிருந்த பெண்களும், குழந்தைகளும் கை நிறைய மலர்களைக் கொண்டு வந்து ஷாவின் பிறந்த நாளை

வாழ்த்திப் பாடுவதற்காகக் கூடியிருந்தார்கள். ஆனால், ஷாவோ அவர்களுக்கு அகப்படாமல் எங்கோ சுற்றிக் கொண்டிருந்தார்.

## ஆடம்பரத்தை வெறுப்பவர்

ஷா எப்பொழுதுமே ஆடம்பரத்தை வெறுத்து எளிமையையே விரும்பினார். பெரிய விழாக்களை அவர் விரும்புவது இல்லை. கிறிஸ்துமஸ் விழாவின் ஆடம்பரத்தை அவர் மிகவும் வெறுத்தார்.

கிறிஸ்துமஸ் விழாக் கொண்டாட்டத்தின்போது லண்டன் நகரத்தில் இருக்க விரும்பாமல், எங்காவது கிராமத்துக்குச் சென்று விடுவார்.

ஷாவின் மனைவி செல்வம் நிறைந்த குடும்பத்திலே பிறந்து வளர்ந்து வந்தவராக இருந்தும், ஷாவைப் போலவே ஆடம்பரத்தை வெறுத்து, எளிமையாக வாழப் பழகிக் கொண்டார்.

செல்வந்தர்களின் ஆடம்பர வாழ்க்கையைக் கண்டு மற்றவர்கள் ஏமாந்து போகக்கூடாது என்று அறிவுறுத்துகிறார் ஷா.

“ஏழைகள் பல நாட்கள் பாடுபட்டுப் பெறுகின்ற விடுமுறை நாட்களில், ஒரு மணி நேரமோ அல்லது அரை

நாள் பொழுதோ அல்லது ஒரு வாரமோ இன்பமாக வாழ முயன்று, சேர்த்ததை எல்லாம் உல்லாசப் பயணத்திலும், உணவு விடுதிகளிலும் செலவு செய்துவிடுகிறார்கள். கிடைக்காமல் கிடைத்திடும் மாறுதலான வாழ்க்கை ஆகையால், அந்தப் பொழுதுபோக்கில் உள்ள துன்பங்களையும், தொல்லைகளையும், ஜன நெருக்கத்தையும், களைப்பையும் பொருட்படுத்தாமல் மகிழ்வதாக நடிக்கிறார்கள்" என்று ஷா கூறுகிறார்.

உண்மையாகவே செல்வந்தர்கள் ஆடம்பர வாழ்க்கை வாழ்வதனால், அதில் இன்பத்தையோ, உடல் நலத்தையோ உரிமையையோ காண முடியாது என்பது அவரது கருத்து.

## பாடுபட்டு உழைத்தவர்

கடந்த பல ஆண்டுகளாக நான் உழைக்க வேண்டிய கட்டாய நிலையில் இல்லை. எனக்கு அத்தகைய பொருளாதாரக் குறையோ, வேறு காரணமோ ஒன்றும் இல்லை. ஆனால் அறிவுள்ள செல்வந்தர்களைப் போல் நானும் பாடுபட்டு உழைத்திருக்கிறேன். ஆயினும், உண்பதிலும், உடுப்பதிலும் என் நிலைமை பழையபடியே இருக்கிறது மாறுதல் எதுவும் இல்லை. என் சட்டைப்பைகள் வறண்டு இருந்த போதும், லண்டன் கடைகளில் ஆடம்பரப்

பொருள்கள் ஒன்றும் வாங்கியதில்லை அப்போது வாங்குவதற்குப் பணமும் இல்லை. ஆனால் பிற்காலத்தில் பணம் நிறைய வைத்திருந்தபோதும் அத்தகைய பொருள்களை வாங்கவில்லை. நாள்தோறும் அம்மாதிரிப் பொருள்களை வாங்காமலேயே திரும்பி இருக்கிறேன். நான் பற்றற்ற துறவி அல்ல; தன்னைத்தான் சகித்துக்கொள்வதால் கடவுளின் அருளைப் பெறலாம் என்றோ, இறந்தபின் மறுமையில் உரிமை அதிகரிக்கும் என்று எண்ணும் கற்பனையும் என்னிடத்தில் சிறிதும் இல்லை. நான் விரும்பினால் செல்வந்தர்களைப் போல் ஆடம்பர வாழ்க்கை வாழ்வேன்; வாழமுடியும். ஆனால், நான் அந்த வாழ்க்கையை விரும்பவில்லை. அதனால் அவ்வாறு வாழவில்லை. தினசரி நடைமுறையிலும் அந்த வாழ்க்கையை விடாமல் ஆராய்ந்து வருகிறேன். அதன் பிற்கால விளைவுகளையும் விடாமல் கண்டு வருகிறேன். அத்தகைய வாழ்க்கை ஓர் ஆண்டு வாழ்வேனானால், கற்பனையிலும் காண இயலாத அளவு துன்பமான நிலைமை எனக்கு வந்துசேரும் என்பதை நான் அறிவேன். சோம்பல் மிகுந்த செல்வந்தர்களைப் போல் பல நாட்களில், பிற்பகல்களைக் கழித்திருக்கிறேன். அதனால் அது எத்தகையது என்பது எனக்கு நன்றாகத் தெரியும். தற்கொலையைப் போல எனக்குத் தோன்றுகிறது" என்று தெளிவாகக் கூறினார். அதனால்தான் அவர் எளிமையான, செம்மையான வாழ்வை விரும்பிப் போற்றினார்.

## வறுமையின் பகைவர்

வறுமையைக் கண்டு ஆறுதல் பெறும் போக்கோ செல்வத்தைக் குறித்து கவலையற்றிருக்கும் தன்மையோ அவரிடம் இருந்ததில்லை.

வறுமையே பாவங்களில் எல்லாம் பொல்லாதது என்றும், வறியநிலையில் வாழ்வதே கொடிய பாவவாழ்க்கை என்றும் அந்தப் பாவத்தைப் போக்கிக் கொள்வதே முதல் கடமையாகக் கொள்ளவேண்டும் என்றும் திரும்பத் திரும்ப விளக்கியுள்ளார்.

பணமே உலகத்தில் மிகச்சிறந்த பொருளாக உள்ளது; ஆகையால் தனிப்பட்ட வாழ்க்கையானாலும், அல்லது சமுதாய வாழ்க்கையானாலும் சீரான அடிப்படையிலே அமைந்தால்தான் நன்மை எதுவும் நிலைக்கும், வெற்றியும் பெறும் என்பது அவர் கொள்கை. அவருடைய நூல்களில் எல்லாம் அவர் வறுமையின் பொல்லாத பகைவராகவே விளங்கினார்.

இளைஞர்களுக்கு அறிவுரை கூறியுள்ளதில், இக்காலத்தில் பணமே உலக வாழ்க்கையின் அடிப்படையாக விளங்குவதை மறக்காமல் இருக்குமாறு அறிவுறுத்தினார்.

“ஆணாயினும், பெண்ணாயினும் இசை முதலியவற்றைக் கற்றுக் கலைஞர் ஆக விரும்பக்கூடும். அது

வேண்டாம் என்று தடுக்கிறேன். வியாபாரம் செய்யாமல் பங்கு மார்கெட்டில் தேர்ச்சி பெறலாம்.

“பெண்கள் கலையை நாடி மயங்கக்கூடாது. வியாபாரியையோ, பங்கு வாணிகம் செய்வோரையோ மணந்துகொள்ள வேண்டும்” என்று அவர்களுக்கு அறிவுரை கூறி, அதன்மூலம் இன்று உள்ள ஆடம்பரப் போக்கைக் கடுமையாகத் தாக்கியுள்ளார்.

## ஓவியக் கலைஞர்

ஓவியக் கலையிலும் ஷா நிபுணர். தாம் எழுதிய நாடகக் காட்சிகள் பலவற்றிற்குத் தாமே ஓவியங்கள் தீட்டியுள்ளார்.

தம் தாயின் ஓவியத்தை முழுவடிவில் தாமே எழுதியுள்ளார்.

அவர் சிறந்த நாடக ஆசிரியர்; ஓவியக் கலைஞர்; சிறந்த நடிகர்.

## யுத்த வெறி

முதல் உலக யுத்தம் நிகழ்ந்தபோது, “யுத்தம் வேண்டாம் என்ற கொள்கை வேரூன்றி, உலகத்தில் அமைதி நிலவ வேண்டுமானால், இராணுவத்திலுள்ள வீரர்கள் தங்கள் தலைவர்களைச் சுட்டு வீழ்த்திவிட்டுத் திரும்பி வரவேண்டும்.

நாட்டு மக்கள் தங்களுடைய வரிப்பணம் யுத்தத்துக்குச் செலவாகாமல் தடுக்க வேண்டும்" எனக் கூறியதோடு, ஆங்கில அதிகாரிகள் மீது சில குற்றங்களைச் சுமத்தினார் ஷா.

இத்தகைய புரட்சிக் கருத்துக்களைக் கூறி, ஷா சிக்கலில் மாட்டிக் கொண்டார். ஆங்கிலேயர்களின் வெறுப்புக்கு ஆளானார்.

## தாக்குதலுக்கு ஆளானார்

பத்திரிகைகள் அவரைக் கடுமையாகத் தாக்கி எழுதின. அவருடைய நாடகங்களை மக்கள் புறக்கணித்து ஒதுக்க வேண்டும் என அறிவித்தன.

நண்பர்கள் பலர் ஷாவை வெறுத்து ஒதுக்கி விட்டனர்.

எங்காவது ஷா அலுவலாகச் சென்றால், அங்கே இருந்தவர்கள் அவரைப் பார்த்ததும் மெதுவாக வெளியேறத் தொடங்கினார்கள்.

கடுமையான சொற்களால் வைது எழுதிய கடிதங்கள் நாள்தோறும் ஷாவைத் தேடிவந்து குவிந்தன.

"ஷாவுக்குத் தார் அடித்துத் தண்டிக்க வேண்டும்" என்று அச்சிட்டு அறிக்கை அனுப்பியவர் ஜேக்ஸ்குயர் என்பவர்.

நூல் ஆசிரியர் கழகத்தின் ஒரு கூட்டத்தில் ஷா இருந்தார். அப்பொழுது லாகே என்னும் ஆசிரியர் பரபரப்போடு எழுந்து "ஷா இருக்கும் கூட்டத்தில் அவரோடு நானும் உட்கார்ந்திருக்க விரும்பவில்லை" என்று கூறி கதவைத் தடார் என்று தள்ளிக்கொண்டு வெளியேறிவிட்டார்.

ஷா மீது எழுந்த வெறுப்பின் காரணமாக, ஆங்கிலப் பத்திரிகைகள் பலவாறு எழுதின. "ஷாவின் புகழ் ஒழிந்தது", "சிறைக் கைதிபோல ஷா தம்முடைய மாடியில் புறக்கணிக்கப்பட்டு வாழ்கிறார்", "ஷா வெளியே வந்தால் மக்கள் அவரைத் தாக்கி, ஒழித்துக்கட்டிவிடுவார்கள்", "ஷாவை பின்பற்றுவோர் எவரும் இல்லை", "ஷாவின் வாழ்க்கை பாழாகிவிட்டது" என்றெல்லாம் எழுதின.

## தற்பெருமை

"அவ்வப்போது, என் எழுத்துக்களிலிருந்தே நான் மேற்கோள் காட்டுவது வழக்கம். ஏனெனில் அவை என் எழுத்துக்களுக்கு மிகுந்த சுவையூட்டுகின்றன.

(தம் எழுத்துக்களைத் தாமே பாராட்டிக்கொள்ளும் வழக்கம் ஷாவிடம் காண முடியும்).

## மீண்டும் ஷாவின் புகழ்

ஆனால், ஷா மீண்டும் வெளியே வந்து கூட்டங்களில் பேசத் தொடங்கினார். முன்னிலும் பல மடங்காக, மக்கள் திரண்டுவந்து ஆரவாரம் செய்து ஷாவை வரவேற்றனர்.

யுத்த வெறி தணிந்த பிறகு, முன்னர் வெறுத்த லாகேயும், ஜேக்ஸ்குயரும் மீண்டும் ஷாவிடம் வந்து கைகுலுக்கி அளவளாவினார்கள்.

"யுத்த வெறியானது பிளேக், காலரா முதலான தொற்றுநோய்களைப் போலவே எனக்குத் தோன்றுகிறது. ஆகையால், மிகுந்த காய்ச்சலால் சன்னிபிடித்து தன்னை மறந்து துன்புறும் நோயாளியைக் கருதுவது போலவேதான் யுத்த வெறிபிடித்த மக்களைக் கருத வேண்டும். அந்த நிலையில் அவர்களைக் குறைகூறிப் பயன் இல்லை" என்று கூறினார் ஷா.

## பெண்களிடம் மதிப்பு

பெண்களிடத்தில் ஷாவுக்கு மதிப்பு உண்டு. பெண்களின் முன்னேற்றத்தில் மிகவும் அக்கறை கொண்டிருந்தார்.

அவருடைய நாடகங்கள் பலவற்றில் பெண்களை மிக உயர்வாகக் குறிப்பிடுகிறார்.

பெண்ணே ஆணைப்படைத்து வளர்ப்பவள்; பெண்ணே ஆணை ஆட்கொண்டு வாழ்விப்பவர் என்று பல இடங்களில் புலப்படுத்துகிறார்.

"இசைவாணர் வீணையைப் போற்றுவதுபோல், இராணுவ வீரன் துப்பாக்கியைப் போற்றுவது போல் பெண் தன் கணவனைப் போற்றுகிறாள்" என ஒரு நாடகத்தின் கதாபாத்திரத்தின் வாயிலாகக் கூறுகிறார்.

## அமைதியான இல்வாழ்க்கை

நாற்பது வயதுக்குமேல் ஷா திருமணம் செய்து கொண்டவர். மக்கட்பேறு இல்லாதவர். மனைவியோடு அமைதியோடும், அன்போடும் வாழ்ந்தார். ஷா மிகவும் சிக்கனமானவர். ஆடம்பரத்தை விரும்பாதவர். மனைவி செல்வச் செழிப்பில் வளர்ந்தவள் என்ற போதிலும் ஷாவின் விருப்பம்போல், எளிய வாழ்க்கையை மேற்கொண்டு மகிழ்ச்சியாக வாழ்ந்தார்.

## தாயும் மகனும்

தன் தந்தையிடம் ஷாவுக்கு வெறுப்பும், கசப்பும் இருந்தது. இருவரும் பிரிந்தே வாழ முற்பட்டனர். ஆனால் தாயிடம் எவ்வித கசப்பும் இல்லாமல் அவருடன் இருந்து வந்தார் ஷா.

மகன் உலகம் அறிந்தவராகத் திகழும் காலம் வரையிலும் ஷாவின் தாய் உயிரோடு இருந்தார்.

இறுதிப் பத்தாண்டுகள் வரை, தாயை நல்லமுறையில் காப்பாற்றுவதற்கு ஏற்பாடு செய்திருந்தார் ஷா.

ஆனால், ஷாவின் தொண்டுகளில் அந்தத் தாய் எந்தவித அக்கறையும் கொள்ளவில்லை.

இசைக் கலையில் தேர்ச்சி பெற்றிருந்த தாய், ஷாவின் இசை ஆராய்ச்சிகளைப் படிக்கவில்லை; ஷா எழுதிய நாடகங்களைக் கூட அவர் பார்த்ததில்லை. ஆனால் சிலவற்றைப் படித்திருக்கக்கூடும். இது மிகுந்த ஆச்சரியத்தை அளிக்கவில்லையா?

இறந்த உடலைப் புதைப்பதை ஷா விரும்புவதில்லை. அதனால், தாயின் உடலுக்கு எரியூட்டச் செய்தார். எரியூட்டுச் சடங்கின்போது அவர் ஒதுங்கியே இருந்தார். ஷாவின் முகத்தில் துயரம் சிறிதும் இல்லை. ஆறுதலான மகிழ்ச்சியே படர்ந்திருந்தது. அவருடைய மன நிலையைக் கண்ட அருகில் இருந்த நண்பர் வியப்படைந்தார்.

## ஊர் சுற்ற விரும்பாதவர்

எப்போதும் ஷா தாமாகவே மகிழ்ச்சிக்கான வழிகளைத் தேடித் திரிந்ததே இல்லை. அவர் இயற்கையாகவே

வெளியிடங்களுக்குச் சென்று சுற்றி அலைவதில் விருப்பம் இல்லாதவர்.

ஆனால், அவர் மனைவியோ அதற்கு எதிரிடையானவர். அடிக்கடி வீட்டை விட்டு வெளியே சென்று, பொழுது போக்குவதையே விரும்புவார்.

ஊரில் இருந்துகொண்டே, தினசரிக் கடமைகளைத் திருத்தமாகச் செய்து முடிப்பதிலே ஷா மகிழ்ச்சி அடைந்தார்.

“என்னளவில் விட்டு விட்டிருந்தால், பிறந்த வீட்டை விட்டு வெளியே போகலாம், அதிலே இறந்த போயிருப்பேன்’ என்கிறார்.

“சில மரங்கள் மனிதனைக் காட்டிலும் உயரமாக வளர்ந்து, நீண்டகாலம் இருப்பதற்கான காரணம் என்ன? ஓர் இடத்தைவிட்டு மற்றோர் இடத்தை நாடிச் சென்று சக்தியை வீணடிக்காததே காரணம்” என்று கூறுகிறார் ஷா.

“அவர் ஒரு பழைய டிராம் வண்டி, அது போன பாதையிலேயே திரும்பத் திரும்பப் போய்க்கொண்டிருக்கும்” என்று ஷாவைப் பற்றி திருமதி பில்லிமோர் கூறுகிறார்.

## ஷாவின் உலகப் பயணம்

ஷாவின் நெருங்கிய நண்பர் அஸ்டார் தம்பதிகள் ரஷ்யாவுக்குப் புறப்பட்டபோது, ஷாவை வற்புறுத்தி

அழைத்தார்கள். எதிர்பாராத வகையில் ஷா அவர்களுடன் புறப்பட்டார். அது பலருக்கு வியப்பை அளித்தது.

ஷா எழுபத்தைந்து வயதைக் கடந்தபிறகே, உலகப் பயணத்தை மேற்கொண்டார். அதுவும் அவருடைய மனைவியின் வேண்டுகோளுக்கு இணங்கியே பயணத்தை ஏற்றார்.

சென்ற இடங்களை எல்லாம் சுற்றிப் பார்த்தபிறகு, "எங்கும் புதுமை இல்லை, ஓர் இடம் மற்றோர் இடத்தைப் போலவேதான் இருக்கிறது" என்றார் ஷா.

ஷாவும் அவருடைய மனைவியும் நெருங்கிய நண்பர்களோடு பம்பாயில் வந்து இறங்கினார்கள். ஒரு வாரம் இந்தியாவில் தங்கி தாஜ்மகால் முதலியவற்றைச் சுற்றிப் பார்த்தனர்.

ஆனால், ஷா மட்டும் பம்பாய் துறைமுகத்திலே தங்கிவிட்டார். அங்கே வந்தவர்களுடன் பேசி, பலவற்றை அறிந்தார்.

"பம்பாயில் இருந்தபோது, என்னுடைய பெயர் ஜைனமதம் என்ற பெயருடன் இருப்பதைத் தெரிந்து கொண்டேன்" என்றார் ஷா.

சைனாவின் சரித்திரப் புகழ்பெற்ற நீண்ட நெடுஞ்சுவரைப்பற்றி ஷாவைக் கேட்டபோது, "விமானத்தில்

பறந்தபோது அதைக் கண்டேன். மற்ற சுவர்களைப் போலவே அதுவும் ஒரு சுவர். அவ்வளவுதான்!” என்றார்.

ஷாவின் நாடகங்களுக்குப் புகழும், பொருளும் அளித்துப் போற்றிய அமெரிக்காவுக்கு 1933ல் ஒரே ஒரு முறை விமானத்தில் போய் வந்தார்.

## ஓய்வை அறியாதவர்

ஓய்வு என்பதையே அறியாதவர் ஷா, எப்பொழுதும் எதையாவது செய்து கொண்டிருப்பதே அவருடைய பொழுதுபோக்காகும்.

“என் வாழ்க்கையில் நான் ஒரு நாளும் விடுமுறை பெற்றதே இல்லை” என்று கூறுகிறார் ஷா.

உழைப்பதையே எந்த நாளிலும் இன்பமாகக் கொண்டவர்.

புகைப்படம் எடுத்தல், அதைக் கழுவுதல், கார் ஓட்டுதல், நீந்துதல் இவற்றில் ஷாவுக்கு விருப்பம் அதிகம்.

இசையில் அடிக்கடி ஆழ்ந்து விடுவார். இலக்கியத்தைக் காட்டிலும், இசையிலே அவருக்குக் கவர்ச்சி அதிகம். பாடும் பழக்கமும் அவருக்கு உண்டு.

பொழுது போக்குக்காக, ஷா எதில் ஈடுபட்டபோதிலும் படிப்பும், எழுத்துமே அவருக்கு முக்கிய குறிக்கோளாக இருந்தது.

"படிப்பு என்பது ஒருவருடைய இளமையோடு மட்டும் தொடர்பு உடையது அல்ல; எனக்கு எண்பத்தெட்டாவது வயது நடக்கிறது. ஆனால், இன்னும் எவ்வளவோ படிக்க வேண்டியதிருக்கிறது" என்று எழுதுகிறார் ஷா.

வருமானத்தில் மிகவும் கருத்தாக இருப்பவர் ஷா. நாடக நிறுவனத்தாரையும், புத்தக வெளியீட்டாரையும் விட சட்ட நுட்பமும், நீதி இயலும் நன்கு அறிந்தவர்.

நாடக நிறுவனத்தாரும், புத்தக வெளியீட்டாளரும், வெறும் கனவு காண்போர் என்று ஷா குறிப்பிடுகிறார்.

அவர்களுடன் ஒப்பந்தங்கள் எழுதும்போது, தம்முடைய உரிமையையும், அவர்களுடைய நன்மையையும், கருத்தில் கொண்டு திறம்பட எழுதுவதில் கெட்டிக்காரர்.

சிறிதானாலும், பெரிதானாலும் எல்லாவற்றையும் கணக்குப் பார்த்து நிர்வகிக்க கற்றுக்கொண்டார் ஷா.

கலையானது விற்பனைக்கு வரும்போது, அதற்கு உரிய தொகை விலையாகக் கிடைக்க வேண்டும் என்பது அவருடைய கருத்து. குறைந்த விலைக்கு விற்பதை அவர் எப்பொழுதுமே விரும்பமாட்டார்.

பணம் இருந்தால்தான் வாழ்க்கையில் நிலையான பாதுகாப்பு உண்டு என்றும் சின்னஞ்சிறு தொல்லைகளிலிருந்து விடுதலைபெற இயலும் என்றும் அவர் கருதினார்.

அனைவருக்கும் சமமான வருமானம் அமையக்கூடிய சமுதாயத்திலே அவர் வாழ விரும்பினார்.

வருமானம் குறைந்தவர்களுக்கு, வருமானம் மிகுந்தவர்கள் உதவி புரியலாமே என்றால், உதவி பெறுவோர் உதவி அளிப்போருக்குச் சுமையாகவும், தொல்லையாகவும், ஓரளவு பகைவர்களாகவும் கூட மாறுவதால் அதை மிகவும் வெறுத்தார் ஷா.

## அறிவாற்றல் மிக்கவர்

எதையும் நுட்பமாகக் காண்பதில் ஷாவுக்கு ஆர்வம் அதிகம்.

ஆய்வுக்கூடங்களுக்குச் சென்று நுண் உயிர்களைப் பூதக்கண்ணாடியின் மூலம் காண்பார்.

இயந்திரங்கள் எவ்வாறு இயங்குகின்றன என்பதை ஆராய்வார்.

இசைத்தட்டுக் கருவி, கம்பி இல்லாத தந்தி, கணக்குப் பொறி முதலான எதையும் ஆராயாமல் அவர் விடுவதில்லை.

தம்முடைய அறுபதாவது வயதில் மோட்டார்சைக்கிள் ஒன்று வாங்கி பல மைல் தொலைவு வரையில் அதை ஓட்டிப் பார்த்தார் ஷா.

ஷா தொண்ணூற்று நான்கு வயதிலும்கூட தெளிவோடு நாள் தவறாமல் படித்து வந்தார்.

உணவு வேளையில்கூட புத்தகமும் கையுமாக இருப்பார்.

கடிதங்களக்குத் தம் கையாலேயே பதில் எழுதினார்.

கடமைகளை இயந்திரம்போல் தவறாமல் செய்து வந்தார்.

கவலை இல்லாமல், மகிழ்ச்சி ததும்ப புன்முறுவலோடு திகழ்ந்தார்.

தள்ளாத வயதிலும் அறிவாற்றல் சிறிதும் தளராதவராக வாழ்ந்தார்.

தம் அனுபவத்தால் ஆராய்ந்து, உணவிலும், பயிற்சியிலும் நல்ல முறைகளைத் தவறாமல் கையாண்டார்.

முதிய வயதிலும்கூட தவறாமல் கண்களை நீரில் கழுவிக் காத்து வந்தார். அதனால் மங்காத பார்வை பெற்றிருந்தார்.

இப்படியாக, ஒவ்வொரு சிறிய பழக்கத்தையும் ஆராய்ந்து, தெளிந்து நன்மை கடைப்பிடித்து, உடலைப் பேணி வந்தார். அதனால் அவருடைய அறிவும், ஆற்றலும் முதுமையிலும் கெடாமல் இருந்து வந்தன.

## கடமை தவறாதவர்

ஒரு சமயம், லண்டனில் இருந்த வீட்டில் தடுமாறி விழுந்து கால் அடிபட்டுக் கிடந்தார் ஷா. அப்பொழுது அவருக்காக நடைபெற்ற ஒரு சிறப்பு கூட்டத்துக்கு அவரால் போக இயலவில்லை. அதனால் அவருடைய சொற்பொழிவை ஒலிப்பதிவு செய்து கேட்கச் செய்தார்கள். அதில் ஷா,

“என்னைப் போன்ற ஒருவர் தள்ளாமை அடைந்தபோது, ஒரு குறை என்னவென்றால், தலை தடுமாறுவதற்கு முன்னே கால் தடுமாறுகிறது. அதனால், அடிக்கடி கால் தடுக்கிவிழ நேரிடுகிறது” என்று குறிப்பிட்டார்.

கால்கள் தடுமாறும் நிலை ஏற்பட்டாலும், அறிவு தடுமாறவில்லை. தெளிவாக உணர்ந்து, சுவையாய் பேசும் திறமை அவரிடம் திகழ்ந்தது.

தம்முடைய சொந்த வாழ்க்கையிலும், உலகத் தொடர்பான வாழ்க்கையிலும் கடமைகளை ஆராய்ந்து இடையறாது உழைத்து வந்தார். அவற்றின் விளைவுகளாகிய நல்ல பயன்களைக் கண்டு மகிழ்ந்து கூத்தாடியதும் இல்லை. ஏமாற்றங்களைக் கண்டும் சோர்ந்து துயரம் அடைந்ததும் இல்லை.

ஷாவின் மனைவி 1943ல் இறந்துவிட்டார். அதன்பின் லண்டனிலிருந்து முப்பது மைல் தொலைவிலுள்ள அயாட் லாரன்ஸ் என்னும் சிறிய கிராமத்தில் உள்ள வீட்டில் தனியாக வாழ்ந்து வந்தார். உற்றார், உறவினர் எவர் துணையும் இல்லை. கவலை இல்லாமல் தன் வாழ்க்கையைத் தாமே கவனித்துக்கொண்டார்.

அவருடைய அடுத்த வீட்டார் நெருங்கிப் பழகினார்கள். மாலை வேளைகளில் அவர்களுடன் கலந்து உரையாடி மகிழ்ந்தார் ஷா.

## தவறுகளைத் திருத்துதல்

ஷாவின் பேச்சுக்களிலும், எழுத்துக்களிலும் காணப்படும் கிண்டல், கேலி, இகழ்ச்சி ஆகியவற்றை அவரே அறிவார். அவர் கூறுகிறார்:

"என் தொழிலே இதுதான். உங்கள் நிலைமையை அறிந்து, உங்களை நோக்கி, நீங்களே சிரித்துக் கொள்ளும்படி செய்வதே என் நோக்கம். சில வேளைகளில் உங்களை முட்டாள்கள் என்று உணர்ந்து கொள்ளும்படி செய்திருப்பேனானால், அதனாலேயே உங்கள் தவறுகளைக் களைந்து திருத்தியுள்ளேன் என்று எண்ணிக் கொள்ளுங்கள். பல் மருத்துவர் உங்கள் பல்லைப் பிடுங்கி எறிந்து, பல்நோயைக் குணப்படுத்தவில்லையா? அது போன்றதே இதுவும்" என ஒரு முகவுரையில் ஷா கூறுகிறார்.

## ஒழுங்கு முறை

ஷாவின் செயலாளர் ஒரு பெண். அவர் லண்டனில் இருந்தார். எழுத வேண்டிய கடிதங்களை ஷா தம் கையாலேயே எழுதி, தாமே தபால் நிலையத்துக்குச் சென்று போட்டுவிட்டு வந்தார்.

விரிவாக எழுதவேண்டிய கட்டுரை, அறிக்கை, நாடகம் முதலியவற்றை மட்டும் சுருக்கெழுத்தால் எழுதி, லண்டனில் இருக்கும் செயலாளருக்கு அனுப்புவார். அவற்றை அந்தச் செயலாளர் டைப் அடித்து அனுப்பியபின் ஒருமுறை சரிபார்த்து, அச்சுக்கு அனுப்புவார்.

முப்பது ஆண்டுகளாக ஷாவிடம் செயலாளராக இருந்து, அவரிடம் அலுவல் பார்த்து வந்த பெண், "ஒரு கடிதமாவது அல்லது ஒரு நாடகமாவது நேரில் இருந்து சொல்லக்கேட்டு எழுதும் வாய்ப்பு எப்பொழுதுமே எனக்கு இருந்ததில்லை" என்று கூறுகிறார்.

## நானே அறிவாளி

பிரசித்தி பெற்ற நாடக ஆசிரியர் சேக்ஸ்பியரைக் குறைகூறிக் கொண்டிருப்பது பெர்னார்ட்ஷாவின் வழக்கம்.

"பிரசித்திபெற்ற ஷேக்ஸ்பியரை இவ்வாறு குறை கூறலாமா?" என்று ஒருவர் கேட்டார்.

“இந்த உண்மைய ஆராயக்கூடிய திறமை யாருக்கு உண்டோ, அவரிடமே இதைக் கேட்கவேண்டும். அப்படிப் பார்த்தால், இங்கிலாந்தின் மிகச் சிறந்த அறிவாளியிடம் செல்ல வேண்டும். ஆனால், அத்தகைய அறிவாளி நான்தான்!” என்றார் ஷா.

## கிராம வாழ்க்கை

இவ்வளவு சீராக தன் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு அந்தச் சிறு கிராமத்தில் முதுமையில் தனியாக அமைதியோடு வாழ்ந்து வந்தார்.

ஷா, அந்த அயாட் லாரன்ஸ் என்னும் கிராமத்தை எப்படி தேர்ந்தெடுத்தார்? அதற்கான காரணத்தை அவர் கூறுகிறார்:

அந்தக் கிராமத்துக்கு ஒருமுறை ஷா சென்று சுற்றிப் பார்த்தபோது அங்கே இருந்த ஒரு கல்லறையில் “ஜேன் எவரஸ்லே – பிறப்பு 1815; இறப்பு 1895 – குறுகிய வாழ்நாள்” என்று பொறித்திருந்ததைக் கண்டார். எண்பது ஆண்டுகள் வாழ்ந்து, மரணம் அடைந்த ஒருவர் குறுகிய வாழ்நாள் பெற்றவராகக் கருதப்படும் இடமே தமக்குத் தகுதியான இடம் என்று உணர்ந்து, உடனே அங்கே சென்று வாழத் தீர்மானித்தார்.

# பிறந்த நாள் விழா

ஷாவின் பிறந்தநாள் 1950, ஜூலை 26. அதுவே அவருடைய கடைசிப் பிறந்தநாளாக ஆகியது. அதாவது 94வது பிறந்த நாள்!

வழக்கம்போல் தம்முடைய பிறந்தநாள் விழா கொண்டாடுவதை அவர் உறுதியாக மறுத்தார். ஆனாலும் அன்பர்கள் அந்த விழாவைக் கொண்டாடினார்கள்.

“ என் பிறந்த நாட்கள் எனக்கு மிகக் கொடியவை ஆகும். அதைப்பற்றி பலவாறு எனக்கு விடாமல் நினைவூட்டுபவர்கள் என்னால் எவ்வளவு முடியுமோ, அவ்வளவுக்கு வெறுத்துப் பகைக்கும்படியாகச் செய்து விடுகிறார்கள்” என தம்முடைய நண்பர் ஒருவருக்கு எழுதினார் ஷா.

தம் பிறந்தநாளைக் கொண்டாடாமல் இருக்குமாறும் தமக்கு நினைவுபடுத்தாமல் இருக்கும்படியும், பரிசுகளை அனுப்பாமல் தடுப்பதற்கும் அச்சிட்ட வேண்டுகோளை தனக்குத் தெரிந்தவர்களுக்கு எல்லாம் முன்னதாகவே அனுப்பியிருந்தார். அப்படியிருந்தும் ஏராளமான பரிசுகள் வந்து குவிந்தன.

பரிசுகளைப் பெற்றுக் கொண்டதற்கு ஷா எப்பொழுதும் நன்றிக் கடிதங்கள் எழுதும் வழக்கம் இல்லை. பரிசுப்

பொருட்களை அருகிலுள்ள மருத்துவமனைக்கு அனுப்பிவிடுவதே அவருடைய வழக்கம்.

## விபத்தும் சிகிச்சையும்

ஷா பல தடவை கால் தடுக்கி விழுந்திருக்கிறார், ஆயினும் 1950 செப்டம்பர் 11ல் தோட்டத்தில் உலாவும்போது இறுதியாக தடுக்கி விழுந்தார். தொடை எலும்பு முறிந்தது. மருத்துவமனைக்கு உடனே எடுத்துச் செல்லப்பட்டார். அறுவை சிகிச்சை நடைபெற்றது.

மருத்துவமனைக்குச் செல்லும்போது கூட சிறந்த சில நூல்களைப் பொறுக்கி எடுத்துச் சென்றிருக்கிறார்.

மருத்துவமனையில் சிகிச்சை பெற்று, படுக்கையில் கிடந்தபோது, அவருடைய கூரிய அறிவும், நாடகக் கலையின் நுட்ப உணர்வும் தளரவில்லை.

அரிஸ்டாட்டிலைப் பற்றியும், செயின்ட் ஜோனைப் பற்றியும், தம்மைப் பற்றியும் மருத்துவமனையில் டாக்டர்களிடததில் சொற்பொழிவு செய்துகொண்டிருந்தார்.

1950 அக்டோபர் 4ல் ஷாவின் விருப்பப்படி, மருத்துவமனையிலிருந்து வீட்டுக்கு கொண்டுவரப்பட்டார்.

ஷா இறப்பதற்கு ஒரு வாரத்துக்கு முன், தாம் எழுதத் தொடங்கிய ஒரு நாடகத்தை இனி முடிக்கப் போவதில்லை எனத் தெரிவித்தார்.

ஷாவின் மனைவி இறக்குமுன் அஸ்டார் அம்மையாரிடம் தன் கணவரைக் கவனித்துக் கொள்ளும்படி வேண்டிக்கொண்டிருந்தார். அதன்படி அஸ்டார் அம்மையார் ஷாவின் இறுதி நாட்களில் வந்து தங்கியிருந்தார்.

## சிரமம் எதற்கு?

ஷா நோயுற்றிருக்கும்போது, பத்திரிகை நிருபர்கள் அவரை அணுகி, "உங்களுக்கு என்ன நோய் என்பதை பொதுமக்கள் அறிய விரும்புகின்றனர்" என்று கேட்டனர்.

"ஏன் இவ்வளவு சிரமம்? ஷா இறந்துவிட்டதாகச் சொல்லிவிடுங்கள். அதனால் எனக்கு எவ்வளவோ தொல்லைகளை குறையும்" என்றார் ஷா.

## குறைகளே தென்படும்

இர்விங் என்னும் நாடகக் கலைஞர், இப்ஸனின் நாடகங்களைப் புறக்கணித்துவிட்டு, ஷேக்ஸ்பியரின் நாடகங்களையே புகழ்ந்து அரங்கில் நடித்து வந்தார்.

இப்ஸனின் மீது ஷாவுக்கு அளவற்ற பிரியம் உண்டு. ஆகையால், மக்களின் மத்தியில் நாடகக் கலைஞர் இர்விங்குக்கு எதிர்ப்பு உண்டாக்கக் கருதி, அவரை இகழ்ந்தும், இப்ஸனைப் புகழ்ந்தும் எழுத நேர்ந்த இடங்களில் எல்லாம் ஷேக்ஸ்பியரையும் குறைகூறி ஒதுக்க முற்பட்டார். ஆனால் ஷேக்ஸ்பியரின் கவிதைத் திறனையும் கலை உணர்ச்சியையும் பாராட்டிக் கூறிய கருத்துக்களை மக்கள் மறந்துவிட்டு ஷா கூறிய குறைகளை மட்டுமே மனத்தில் கொண்டார்கள்.

## நாடகத்துக்கு உரிமைத் தொகை

எழுத்தின் மூலம் நிறையச் சம்பாதித்தார் ஷா. உலகில் எந்த மூலையில் அவருடைய நாடகம் நிகழ்ந்தாலும், தமக்குச் சேரவேண்டிய உரிமைத் தொகையை வாங்கத் தயங்கமாட்டார். பண விஷயத்தில் ஒரு காசைக் கூட அவர் விட்டுக் கொடுப்பதில்லை. அவ்வளவு கண்டிப்பானவர். யாரும் அவரை ஏமாற்றிவிடவும் முடியாது.

## நூல் நிலையம்

ஒரு சமயம் ஷா தம்முடைய நூல் நிலையத்தை விற்றுவிடத் தீர்மானித்தார். அவ்வளவுதான், அதற்கு ஏகப்பட்ட கிராக்கி உண்டாகி விட்டது.

ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு ஷா கேட்கும் விலையைச் கொடுத்து வாங்கத் தயாராகி விட்டார்கள்.

ஷா படித்த புத்தகங்களில் ஆங்காங்கே தம்முடைய கருத்தைக் கோடிட்டு குறிப்பிட்டிருப்பாராம். அதுவும் ஒரு புதுமைதானே!

## சுறுசுறுப்பு

ஷாவின் தோட்டத்தில் இருந்த தேன்கூட்டைப் பழுது பார்ப்பதற்காகச் சென்றார். திருமதி பெல்லா லைத் என்பவர்.

"தேன்கூடு இருக்கும் இடத்தைக் காண்பிப்பதற்காக ஷா விறுவிறு என்று நடந்து வந்தார். 93 வயதில் அவ்வளவு சுறுசுறுப்பாக இருந்தார்" என்று கூறுகிறார் பெல்லா லைத்.

## அவருடைய விருப்பம்

ஷா மது அருந்துவது இல்லை, புலால் உண்பதில்லை, சுருட்டு புகைப்பது இல்லை தோட்டத்தில் விளையும் காய்கறிகளையே பயன்படுத்தவார். இயற்கை உணவுகளையே பெரிதும் விரும்புவார்ர். இயற்கைச் சிகிச்சை முறைகளிலே மிகவும் ஆர்வம் கொண்டவர். ஒலி, உச்சரிப்பு முறை, ஆண்–பெண் கூட்டு வாக்குரிமை இவற்றை ஆதரிக்கிறவர்.

## திரும்பி வந்துள்ளன

ஆரம்ப எழுத்தாளர்களின் கதை, கட்டுரைகளை, "பிரசுரிக்க இயலாமைக்கு வருந்துகிறோம்" என்ற முத்திரையைக் குத்தி, திருப்பி அனுப்பிவிடுவது சில பத்திரிகை ஆசிரியர்களின் வழக்கம்.

ஷாவின் கதை, கட்டுரைகளும் ஆரம்பகாலத்தில் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படாமல் நிறைய திரும்பி வந்திருக்கின்றனவாம். ஆனால், ஷா அதற்காகச் சோர்ந்து விடவில்லை.

(கதை, கட்டுரையில் கொள்கை முரண்பாடு இருந்தாலும் பத்திரிகையாசிரியர்கள் பிரசுரிப்பதில்லை).

## தினசரிக் கடமை

தினமும் ஐந்து பக்கங்கள் எப்படியும் எழுதிவிடுவார் ஷா. அதை ஒரு தினசரிக் கடமையாகவே கொண்டிருந்திருக்கிறார்.

ஏதோ அசௌகரியத்தால் ஒரு நாள் எழுத இயலாமல் போனால், மறுநாள் அதையும் சேர்த்து எழுதிவிடுவது வழக்கம்.

## பழக்கவழக்கம்

தமக்கு வரும் கடிதங்களுக்கு உடனுக்கு உடன் பதில் எழுதி விடுவது அவருடைய பழக்கம். எழுதியக் கடிதங்களை தாமே அஞ்சல் நிலையத்துக்குப் போய், பெட்டியில் போட்டு வருவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்.

## அலங்கோலமான அறை

ஷா தங்கி இருந்த அறை மிகச் சிறியது; கண்ட இடம் எல்லாம் தும்பும், தூசியும் படிந்திருந்தன. எல்லாம் ஒழுங்கு இல்லாமல் கிடந்தன.

பகல், இரவு, பனிக்காலம், குளிர்காலம், எதுவானாலும் எப்பொழுதுமே ஜன்னலைத் திறந்தபடியே வைத்திருப்பது ஷாவின் வழக்கம். அதனால் தூசி வெளியிலிருந்து வந்தபடியே இருந்தது.

மேஜைமீது குப்பைபோல் தாள்கள் கிடந்தன. வந்த கடிதங்களும், தபால் உறைகளும், பேனாக்களும், செய்தித் தாள்களும் அவற்றோடு கத்திகளும், கரண்டிகளும், பழங்களும் சர்க்கரையும் வெண்ணெயும் கலந்து கிடந்தன.

யாராவது அவற்றை ஒழுங்குப்படுத்த முன் வந்திருப்பார்கள். ஆனால், ஷாவின் தாள்களை யாரும் தொடக்கூடாது; எடுக்கவும் கூடாது.

மேஜை, தட்டச்சுப் பொறி, நாற்காலி இவையே அந்த அறையை அடைத்துக் கொண்டிருந்தன.

எப்பொழுதாவது ஒருமுறை அதைச் சுத்தப்படுத்தி, ஒழுங்கு செய்வதும் உண்டு. அதற்கு இரண்டு முழு நாட்களின் உழைப்பு வேண்டியிருக்குமாம். அந்த இரண்டு நாட்களே ஷாவின் மூளைக்கு ஓய்வு நாட்கள்.

ஏதேனும் ஒரு புத்தகத்தை ஷா படிப்பதாக இருந்தால் அந்தப் புத்தகம் திறந்தபடியே மேஜை மீது இருக்கும்.

அவர் உடை அணியும் போதும் அதைக் களையும் போதும், மற்ற சிறு வேலைகளில் ஈடுபடும்போதும், திறந்திருக்கும் பக்கங்களைத் தள்ளித் தள்ளிப் படிப்பாராம். அதைப் படித்து முடித்த பிறகே அந்தப் புத்தகம் மூடப்படும். அதற்கு மத்தியில் வேறு ஒரு புத்தகத்தைப் படிப்பதானால் அதுவும் கூட அருகில் திறந்து வைக்கப்பட்டிருக்கும், இப்படியாக, பல புத்தகங்கள் மேஜைமீது திறந்தவாறு தூசு படிந்தபடியே கிடக்கும்.

## அளவற்ற மகிழ்ச்சி

ஒரு நாடகத்தை பல வாரங்கள் தொடர்ந்து நடத்தி, கடைசியில் கூட்டம் குறைந்து, வருமானத்தையும் இழந்து, புகழையும் குறைத்துக் கொள்வது ஷாவுக்குப் பிடிக்காது.

சில வாரங்கள் மட்டுமே நாடகத்தை நடத்தி, அரங்கு நிறைந்திருப்பதைக் காண்பதில் ஷாவுக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாகுமாம்.

அதிலும், 'இடம் இல்லை' என்று திரும்பிச் செல்வோரைக் காண்பதில் ஷா மிகவும் மகிழ்ச்சி அடைவாராம்.

## பிரார்த்தனை

ஷாவுக்கு மதத்தில் நம்பிக்கை இல்லை. விக்கிரக வழிபாட்டை வெறுப்பவர். ஆனால், பிரார்த்தனையின் அவசியத்தை மட்டும் உணர்ந்திருந்திருக்கிறார்.

## சொல்லுக்கு மதிப்பு

பிரச்சாரம் செய்வதில் ஷா நிபுணர். அவர் சொல்லுக்கு வெல்லும் திறன் உண்டு என்பது உலகறிந்த உண்மை.

W.H. டேவிஸ் என்னும் கவிஞரைப் பற்றிப் புகழ்ந்து பிரபலப்படுத்தி அவரைக் கைதூக்கிவிட்டார் ஷா.

## கண்டித்தார்

ஷாவுக்கு இந்தியாவின்மீதும் காந்தியடிகளிடத்திலும் மிகுந்த அன்பு உண்டு.

இந்தியாவில் 1942 ஆகஸ்ட்டில் நிகழ்ந்த புரட்சியின் போது, இங்கிலாந்தில் பிரதம மந்திரியாயிருந்த வின்ஸ்டன் சர்ச்சில், இந்தியாவில் நடத்திய அடக்குமுறைக் கொடுமையை மிகவும் கடுமையாகக் கண்டித்து எழுதிய உலகப் பிரமுகர்களில் ஷாவும் ஒருவர்.

## பிரமாத விற்பனை

சாமுவேல் பட்லர் என்னும் எழுத்தாளர் பிரபலம் ஆகாமலும், அவருடைய நூல்கள் விற்பனை மந்தமாகவும் இருந்ததால் அவர் வறுமையில் வாடினார்.

ஷா, அவருக்கு அளித்த ஆதரவினால், சாமுவேல் பட்லருடைய நூல்கள் பிரமாதமான விற்பனை ஆயின.

## உச்ச நிலையில் இருப்பவர்

ஷாவினுடைய சூழ்நிலையே தனிப்போக்குடையது. அவர் பேசத் தொடங்கிவிட்டால், பிரம்மாண்டமான உலகப் பிரச்சினைகள் யாவும் ஏதோ குடும்பத் தகராறுகளைப் போல மாறிவிடும். அவ்வப்போது வரலாற்று நாயகர்களாக விளங்கும் பெரிய பெரிய தலைவர்கள் எல்லோரும் அவர் முன்னே சின்னஞ் சிறு பள்ளிப் பிள்ளைகளைப் போல் ஆகிவிடுவார்கள். அத்தகைய எட்டாத உயரத்தில் அமர்ந்து பேசுவார் அவர்.

## பசுமையும் புதுமையும்

ஷா வாழ்ந்திருந்த கிராமம், 500 ஆண்டுகளுக்கு மேலாக, எவ்வித மாற்றமும் அடையாமல்தான் இருந்தது.

ஷா அடிக்கடி தெருக்களில் உலாவிக்கொண்டு இருக்கையில், செடி கொடிகளின் பசுமை நிறைந்த காட்சிகளை நின்று பார்த்துக் கொண்டிருப்பார்.

அந்த கிராமத்தில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக, அவர் வாழ்ந்து வந்திருக்கிறார். அப்படியும் அங்கு உள்ள ஒவ்வொன்றிலும் ஏதாவது அதிசயத்தையோ, புதுமையையோ கண்டுகளித்தபடியே இருப்பார்.

பழமையானக் கட்டிடங்களைப் படம் பிடிப்பார்.

## புகழைக் கண்டு மயங்காதவர்

தமக்கு உண்டான உலகப் புகழைக் கண்டு ஒருபோதும் மயங்காதவர் ஷா.

ஷாவின் தன்மைகள், செயல்களில் மட்டும் அல்லாமல் எண்ணங்களில், எழுத்துக்களில் மாறுபட்டு, பொது மக்களின் சிந்தனைக்கு எட்டாமல் காணப்பட்டார் அவர்.

ஷாவின் 90–வது பிறந்த நாள் காலையில், பத்திரிகையாளர் மற்றும் பலர் அவருக்கு வாழ்த்துக்கூற, அவர் வாழ்ந்த கிராமத்துக்கு வந்து காத்திருந்தனர்.

ஷா வழக்கம் போல் காலைச் சிற்றுண்டியை முடித்துக் கொண்டார்; செய்தித்தாள்களைப் படித்தார்.

வெளியே வந்து எல்லோரையும் புன்முறுவலோடு பார்த்தார்.

அப்படியே அங்கிருந்தவர்களை விலக்கிக்கொண்டு தம்முடைய ரோல்ஸ் ராய்ஸ் காரில் ஏறி, ஓட்டுநரின் அருகில் அமர்ந்து எங்கோ மலைப்பக்கமாகச் சென்று விட்டார்.

அவருடைய வீட்டிலிருந்த எவருக்குமே ஷா தம்முடைய வயதைப் பற்றிச் சொல்லவில்லையாம். அந்தக் கிராமத்திலிருந்த பெண்களும், குழந்தைகளும் கை நிறைய மலர்களைக் கொண்டு வந்து ஷாவின் பிறந்த நாளை வாழ்த்திப் பாடுவதற்காகக் கூடியிருந்தார்கள். ஆனால், ஷாவோ அவர்களுக்கு அகப்படாமல் எங்கோ சுற்றிக் கொண்டிருந்தார்.

## அறையில் கண்ட காட்சி

சார்லஸ் என்பவர் ஷா வாழ்ந்து வந்த கிராமத்திலுள்ள இல்லத்துக்குச் சென்றார். அவர் கண்ட காட்சியைக் கூறுகிறார்:

“பக்கத்து அறையை எட்டிப் பார்த்தேன்; ஷா தொப்பியையோ, மூக்குக் கண்ணாடியையோ கழற்றாமல்,

மார்பில் கைகளை வைத்துக்கொண்டு படுத்து உறங்கிக்கொண்டிருந்தார்.

"அறையின் உள்ளே வைக்கோல் திணிக்கப்பட்ட இரண்டு ஆந்தை உருவங்கள்; ஷேக்ஸ்பியரின் பளிங்கு உருவச்சிலை; பிரெஞ்சு நாட்டின் வீராங்கனை ஜோன் ஆப் ஆர்க்கின் வெண்கலச்சிலை ஆகியன காணப்பட்டன. மற்றும் ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் மாவட்டங்களின் படங்களும் தொங்கவிடப்பட்டிருந்தன. ஷாவின் நூல்களின் முதல்பதிப்புப் பிரதிகள் சிலவும் அங்கே காணப்பட்டன"

## ஷாவுக்குக் கிடைத்த கௌரவம்

இருபத்தைந்து உலகப் பிரமுகர்களின் பட்டியல் ஒன்றை மேல்நாட்டு ஆசிரியர் ஒருவர் தயாரித்து, பிரபலமான பத்திரிகை ஒன்றில் வெளியிட்டார்.

பெரும் பதவி வகித்தவர்; பெருந்தன்மை வாய்ந்தவர்; உலகிலேயே தைரியசாலியான ஆகாய விமானி; குபேரர்; அன்பு நிறைந்தவர்; சோகம் நிறைந்தவர்; நீதிமான்; விகட நிபுணர் இப்படியாக பிரபலமானவர் பெயர்கள் வெளியிடப்பட்டன.

அந்த உலகப் பிரமுகர்களின் பட்டியலில், "வீண் பெருமைக்குப் பெயர் பெற்றவர் பெர்னார்ட்ஷா" "பெரும்

பணிவுக்குப் பெயர் பெற்றவர் மகாத்மா காந்தி" என்று காணப்படுகிறது.

## சகலகலா வல்லவர்

நாவலாசிரியர், நாடக ஆசிரியர், இலக்கிய விமர்சகர், அரசியல் அறிஞர், சமூகப் புரட்சியாளர், தத்துவ ஞானி, தொழிலாளர் சிந்தனைத் தலைவர், உரிமைப் போரின் அறிவுத் தளபதி, இவ்வாறு ஒவ்வொரு துறையும் அவரை தனக்கே உரியவர் என்றும் பாராட்டியது; வரவேற்றது; உரிமை கொண்டாடியது.

## இலவச பாஸ்

நாடக அரங்கில் கூட்டம் நிறைய வேண்டும் என்பதற்காகவோ, விளம்பரப்படுத்த வேண்டும் என்பதற்காகவோ நல்ல மதிப்புரை கிடைக்க வேண்டும் என்பதற்காகவோ சிலருக்கு 'இலவச பாஸ்' அனுப்பி நாடகம் பார்க்கச் செய்யும் முறையை ஷா மிகவும் கண்டிப்பார்.

## கூர்மையான பார்வை

ஷாவின் எழுத்துக்களில் காணப்படும் வேறு பாட்டையும், பொருத்தமற்றதையும் குறைகூறுவோர்க்கு ஷா பதில் கூறுகிறார்:

"என் கண்களைப் பரிசோதனை செய்த கண் மருத்துவர் அளவான நிலையில்தான் இருக்கிறது" என்றார்.

"அப்படியானால் என்னுடைய கண்கள், மற்றவர்களின் கண்களைப் போல இருப்பதாகவே கருதுகிறேன்" என்றார் ஷா.

கண் மருத்துவர் அதை மறுத்து, "இல்லை, இல்லை மற்றவர்களின் கண்கள் பெரும்பாலும் இவ்வாறு இருப்பதில்லை. உங்களுடைய கண்கள் தனி ரகமானவை. மிக நல்ல கண்பார்வை இருக்கிறது. அளவான நிலை என்றால் பொருள்களை, உள்ளது உள்ளபடியே பார்த்து அறியும் ஆற்றல் நூற்றுக்குப் பத்துப் பேருக்குத்தான் உண்டு" என்றார்.

அதைக் குறிப்பிட்டு, "அப்பொழுதுதான், நான் கற்பனைகளை எழுதி வெற்றி பெறாததன் காரணத்தை உணர்ந்தேன். என் முகத்திலுள்ள கண்ணைப் போலவே, என் மனக்கண்ணும் (கற்பனைக்கண்) அளவான நிலையில் இருக்கிறது. பெரும் பாலானவர்களுக்கு மனக்கண்ணும் கெட்டுப் போயிருக்கிறது. அதனால்தான், உலகத்தை கண்டு தான் அறியும் முறை அவர்களுக்குப் பிடிக்கவில்லை" என்று கூறுகிறார் ஷா.

## திரும்பிக் கொள்வார்

நாடக கலைஞர் இர்விங் இறந்துவிட்டார். அவரது உடலை அடக்கம் செய்த சடங்கில் கலந்துகொள்ள வருமாறு ஷாவுக்கு அழைப்பு வந்தது.

"எனக்கு அனுப்பிய அழைப்பை திருப்பி அனுப்புகிறேன். இலக்கியத்துக்கு இர்விங் வாழ்வோடு தொடர்பு இல்லாததைப் போலவே, அவருடைய இறப்போடும் எனக்குத் தொடர்பு இல்லை.

"இர்விங் வந்தால், ஷேக்ஸ்பியர் தன் சவப்பெட்டியில் திரும்பிக் கொள்வார். அதைப் போலவே, நான் வந்தால் இர்விங்கும் சவப்பெட்டியில் திரும்பிக்கொள்வார்." என்று எழுதினார் ஷா.

(இர்விங்கைப் பிடிக்காமல் முன்னர் தாக்கி எழுதியவர் ஷா).

## அறுவை நிகழ்ச்சி

வயலின் இசை நிகழ்ச்சி ஒன்றுக்குப் போயிருந்தார் ஷா. சிறிது நேரம் இருந்தார். வித்துவானின் இசை நிகழ்ச்சியை ஷா ரசிக்கவில்லை.

"வயலின் வித்துவானைப் பற்றி உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டார், நிகழ்ச்சி அமைப்பாளர்.

"இவருடைய இசையைக் கேட்டபோது, ரூஸ்கியின் நினைவுதான் எனக்கு உண்டாகிறது" என்றார் ஷா.

நிகழ்ச்சி அமைப்பாளர் திடுக்கிட்டு, ரூஸ்கி வயலின் வித்துவான் அல்லவே; நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று வியப்போடு கேட்டார்.

உடனே ஷா, " இவர்மட்டும் என்னவாம்?" என்று பதில் அளித்தார்.

## பொறுப்பை உணர்த்துகிறார்

நாடக ஆசிரியர் சங்கத்தின் குழு ஒன்றில் ஷா உறுப்பினராக இருந்தார். அப்பொழுது மற்றொரு உறுப்பினருக்கு எழுதிய கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டார்.

"ஒரு குழுவில் இருந்து கொண்டு ஏதாவது நன்மை செய்யவேண்டுமானால், அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. அதாவது, குழுவின் ஒவ்வொரு கூட்டத்தையும் புறக்கணிக்காமல் கலந்துகொண்டு, வாழ்க்கையின் நெருக்கடியான நிலைபோல் உணர்ந்து கடமையைச் செய்ய வேண்டும். நீங்களோ உணர்ச்சியும், ஆத்திரமும் மிகுந்தவர்; காரண காரியத்தைப் பற்றி கவலைப்படாதவர்; முழு நேரமும்

வம்பு வளர்த்ததைக் காட்டிலும் வேறு ஒன்றும் செய்யாதவர். ஆகையால், குழுவில் நீங்கள் இல்லாமல் இருப்பதே நல்லது".

## இப்படி ஒரு சங்கமா?

பிராணிகள் நலச் சங்கத்தில், "விலங்குகளைத் துன்புறுத்துதல் கூடாது' என்ற கொள்கைப் பற்றிப் பேசுமாறு ஷாவை அழைத்தார்கள்.

ஷா கூட்டத்துக்கு வந்து அமர்ந்து தன்னைச் சுற்றி இருந்த செல்வந்தர்களையும், செல்வாக்குள்ளவர்களையும் பார்த்தார். பிறகு பேச எழுந்தார்!

"பல விலங்குகளை வேட்டையாடிக் கொல்வதால் கிடைக்கக்கூடிய தோலையும், உரோமத்தையும் பயன்படுத்தி தங்களை அலங்கரித்துக்கொண்டு இங்கே வந்து அமர்ந்திருப்பவர்களுக்கு மத்தியில் நின்று, நான் பேச நேர்ந்தமைக்காக மிகவும் வருந்துகிறேன்' என அவர்களுடைய தவறு விளங்குமாறு இடித்துரைத்தார் ஷா.

## மக்களின் பயம்

"கம்யூனிஸம் என்னவோ பரவத்தான் செய்யும், மக்களும் அதைக்கண்டு பயப்படத்தான் செய்கிறார்கள். எப்போதும் அவர்கள் பயந்து கொண்டுதான் இருந்திருக்கிறார்கள்.

தர்க்க ரீதியாகச் சிந்தனை செய்யக் கற்றுக்கொண்டால் ஒழிய, அவர்கள் எதிர்காலத்திலும், எப்போதும் பயந்து கொண்டுதான் இருப்பார்கள் மக்களுக்குத் தெளிவான சிந்தனை சக்தியை ஊட்டும் முயற்சியில் நான் அநேக ஆண்டுகளைக் கழித்திருக்கிறேன். ஆனால், அவர்கள் இன்னும் பயந்துகொண்டுதான் இருக்கிறார்கள்.

இப்போது, கல்வித் தரம் இருக்கிறதே, அதிலும் அரசியல்வாதிகளின் கல்வித் தரம் படுமோசமாக இருக்கிறது. கேவலம் எழுதப்படிக்கத் தெரியாத இந்த ஆசாமிகளுக்கு தலைமை தாங்கும் யோக்கியதை எப்படிக் கிடைத்துவிடும்?" என ஒரு பேட்டியில் ஷா கூறினார்.

## பேரரசர் ஷா

ஷா தம் கொள்கையில் உறுதி உள்ளவர் என்பதற்கு 1902–ல் நடைபெற்ற நிகழ்ச்சி ஒன்று எடுத்துக்காட்டாகும்.

ஆஸ்டிரியத் தலைநகரான வியன்னாவில், ஷாவின் மூன்று நாடகங்கள் நடைபெற இருந்தது.

அந்த நாடகங்களில், சில மாற்றங்கள் செய்ய ஒப்புக்கொண்டாலன்றி, அவற்றிற்கு அனுமதிதர இயலாது என அரசியலார் கூறினர்.

அதை அறிந்த ஷா, "பிரான்ஸ் ஜோஸப் ஆஸ்டிரியா ஹங்கேரியாவின் பேரரசராயிருக்கலாம். ஆனால், நாடக மேடையைப் பொறுத்தவரை, ஷா ஐரோப்பாவுக்கே பேரரசர். ஐரோப்பிய மேடை முழுவதும் அவர் வாக்கே முடிவானதாகும்" என ஆணித்தரமாக தம் கொள்கையை வலியுறுத்தினார்.

அரசு பணிந்துவிட்டது. மாறுதல் எதுவும் இல்லாமல் நாடகங்கள் நடைபெற்றன.

## இயற்கையின் உறுப்பு

"வாளைப் பிடிக்க நான் பயன்படுத்தும உறுப்பு என் கைவிரல், தன்னை உணர்ந்து கொள்ள இயற்கை பயன்படுத்தும் அதன் உறுப்பு என் மூளை."

## யார் விருப்பப்படி நடக்கிறோம்

"உலகின் விருப்பப்படி நாம் நடக்கிறோம், நம் விருப்பப்படியல்ல."

## அறிவும் மனிதனும்

"நான் வீரனையும், வாளையும் பாடமாட்டேன்; அறிவுடைய மனிதனையும் அறிவையும் பாடுவேன்."

## பொய்ப் பற்கள்

சீன நாட்டினர் ஒருவர் ஷாவை நேரில் கண்டு அவருடைய உடல் அமைப்பு ஒவ்வொன்றையும் பாராட்டத் தொடங்கினர்.

தம்முடைய பற்களை சீனர் கவனிப்பதைக் கண்ட ஷா, "பல்லின் தோற்றம் எப்படி?" என்று கேட்டார்.

"மிகப் பாராட்டத்தக்கதாகவே இருக்கிறது" என்றார் அந்தச் சீனர்.

"அப்படியானால் அதை அருகில் வைத்தே பாருங்களேன்" என்று கூறி, தம் பற்களைக் கையில் எடுத்துக் கொடுத்தார் ஷா.

சீனர் பாராட்டிய பற்கள், பொய்ப் பற்கள் என்பதை இதைவிட நகைச்சுவையாக எப்படிக் கூற முடியும்?

முதன்யையானது எது?

ஷாவின் தனிச் சிறப்புக்களுள் முதன்மையானது நகைச்சுவையே ஆகும்.

நகைச்சுவைச் சிறப்பால், பல நாடுகளிலும் மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றவர் ஷா.

## மட்டரகமானப் பேச்சு

"இந்த நாட்டில், அரசியல் சொற்பொழிவுகளின் தரம் சர்வமட்டமாக இருக்கிறது–ஷாவின் கருத்து.

## அவர் செய்த உதவி

"சிட்னிவெப் என்னும் சமதர்ம எழுத்தாளரின் உதவியால்தான் தம் அறிவு விருத்தியானது; இல்லாவிடில் கார்லைல், ரஸ்கின் ஆகியோரைப்போல் வெறும் இலக்கியச் சொல் வீச்சுக்களிலேயே தாம் ஈடுபட்டிருக்கக்கூடும்" என்று ஷா கூறுகிறார்.

## நல்ல நண்பர்

" இந்த உலகத்திலேயே முதன் முதலில் சோவியத் அரசாங்கம் என்னுடைய நாட்டில்தான் தோன்றியது. அப்போது ஷா என் நாட்டின் நண்பர் ஆனார்.

ஷாவின் நேர்மையை என் நாட்டு மக்கள் போற்றினார்கள். அவரை நண்பராக அவர்கள் கருதினார்கள். அவருடைய பெருமைகளை நன்கு மதித்தார்கள். அவருடைய சின்னஞ் சிறு குறைபாடுகளை அவர்கள், பொருட்படுத்தவில்லை.

இந்த எழுத்தாளர் என்னுடைய நாட்டினிடத்திலும், என் நாட்டு மக்களிடத்திலும், கொண்டிருந்த அபிப்பிராயம் எந்த ஒரு மாறுதலும் அடையாமல் அப்படியே இருந்து வருகிறது"

(இவ்வாறு எ. அல்மஸோவ் என்னும் ருஷ்ய எழுத்தாளர் 1946 ஜூலை, "சோவியத் லிட்டரேச்சர்" என்னும் இதழில் எழுதியிருந்தார்.

## சக்தி வாய்ந்தவர்

ஷாவின் நண்பர்கள் சிலர், பார்லிமெண்ட் தேர்தலுக்கு அவரை நிற்கச் சொன்னார்கள்.

"பார்லிமெண்டுக்குள் இருக்கும் நூறு உறுப்பினர்களை விட, வெளியேயிருக்கும் ஒரு ஷா அதிக சக்தி வாய்ந்தவன்" என்று கூறி தேர்தலுக்கு நிற்க மறுத்துவிட்டார் அவர்.

தன் பலத்தையும், செல்வாக்கையும் நன்கு உணர்ந்திருக்கிறார் ஷா.

## அவகாசமே இல்லாதவர்

ஷாவிடம், "உங்கள் நாடகங்களில், நீங்கள் மிகவும் விரும்புவது எது?" என்று ஒருவர் கேட்டார்.

"என்னுடைய நாடகங்கள் பத்தயக் குதிரைகள் அல்ல. ஒருமுறை அவற்றை எழுதி முடித்துவிட்ட பிறகு, மீண்டும்

அவற்றைப்பற்றி நினைப்பதற்கே எனக்கு அவகாசம் இருப்பதில்லை” என்று பதில் அளித்தார் ஷா.

## வேண்டாத கேள்விகள்

ஷாவைப் பார்த்து, பத்திரிகை நிருபர் ஒருவர், ‘உங்களைப் பிரிட்டனுக்கு சர்வாதிகாரியாக்கி விட்டால், நீங்கள் என்ன செய்வீர்கள்” என்று கேட்டார்.

அதற்கு ஷா, “அநேகமாக நீரோவைப்போல வெறியனாகி விட்டாலும் ஆகிவிடுவேன். ஏன் இப்படி சில்லரைத் தனமான கேள்விகளைக் கேட்கிறீர்கள்?” என்று பதில் அளித்தார்.

## தகுதி பெறாத மக்கள்

பொழுது போக்காக நடைபெறும் விளையாட்டுக்களை ஷா எப்பொழுதும் வெறுத்து வந்தார். “நான் நன்கு சிந்தித்தப் பிறகு இந்த முடிவுக்கு வந்தேன். வெட்ட வெளியான இடத்தில், ஒரு பந்தைக் துரத்திக்கொண்டு திரிவதைத் தவிர, வேறு எதற்கும் இக்காலத்து மக்கள் தகுதி அடையவில்லை என்பதை அறிந்தேன்’ என்று கூறுகிறார் ஷா.

# இறுதி ஆசை

இறந்த உடலை எரிக்க வேண்டும் என்பது ஷாவினுடைய கொள்கை.

தம் தாயும் சகோதரியும் இறந்தபோது அவர்களின் உடலை எரிக்கச் செய்தார். 1943ல் தன் மனைவி இறந்த போதும் அவ்வாறே எரிக்கச் செய்தார்.

தாம் இறந்த பிறகு, தம் உடலை எரிப்பதற்கான கட்டணத்தை ஷா முன்னதாகவே கட்டியிருந்தார்.

அவருடைய விருப்பத்தின்படியே, உடல் எரிக்கப்பட்டது. சாம்பலை ஒரு வெண்கலச் சட்டியில் இட்டார்கள். அந்தச் சட்டியில் ஷாவின் மனைவியின் சாம்பல் 1943 முதல் வைக்கப்பட்டிருந்தது.

ஷாவின் விருப்பப்படி, ஷா வாழ்ந்த வீட்டின் தோட்டத்தில், கணவன்–மனைவி இருவருடைய சாம்பல் தூவப்பட்டது.

வறுமையில் பிறந்து வளர்ந்த ஷா, செல்வந்தராக வாழ்ந்தார். இறுதிக் காலத்தில் அவர் சேர்த்து வைத்திருந்த சொத்து பத்துலட்சம் பவுன்கள்!

அவற்றை என்ன செய்யவேண்டும் என்பதைப் பற்றியும் விருப்ப ஆவணத்தில் குறிப்பிட்டிருக்கிறார் ஷா.

அவற்றில் குறிப்பிடத்தக்கவை: ஆங்கில மொழியின் எழுத்துச் சீர்திருத்தம், அயர்லாந்தின் கலை வளர்ச்சி, பிரிட்டிஷ் பொருட்காட்சி, நூல்நிலையம், நாடகக் கலைக்கழகம் முதலியவற்றுக்கு நிதி ஒதுக்கி வைத்துள்ளார்.

ஷாவின் விருப்ப ஆவணத்தின் குறிப்பிடத்தக்க பகுதி:

“நான் இறந்த பிறகு என் உடல் எரிக்கப்படவேண்டும். அந்த சாம்பல், என் மனைவியின் சாம்பலோடு கலக்கப்படவேண்டும்.

முப்பத்தைந்து ஆண்டுகள் நானும் என் மனைவியும் வாழ்ந்து வந்த அயாட் லாரன்ஸ் கிராமத்தில் உள்ள என் வீட்டுத் தோட்டத்தில் சாம்பலைப் புதைக்க வேண்டும் அல்லது தூவப்பட வேண்டும்.

அறங்காவலர்கள் வேறு முறை சிறந்தது என்று கருதினால், அல்லாது இவ்வாறே செய்ய வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

என்னுடைய சமயக் கொள்கைகளையும், விஞ்ஞானக் கருத்துக்களையும் பற்றி இன்னும் தெளிவாக இப்பொழுது விளக்க இயலாதபடியால், பொதுவான நினைவுச் சின்னமோ, கலைச்சின்னமோ, புகழ் முத்திரையோ, சமயக் கருத்துரையோ, சமயச் சடங்கோ என் நினைவுக்காகச் செய்து, அதனால் கிறிஸ்துவ கோயில் அல்லது அந்த

அமைப்பின் கொள்கைகளுக்கு நான் உடன்பட்டிருந்தேன் என்று கருதுமாறு செய்யக்கூடாது.

சிலுவையோ, வதைத்துத் துன்புறுத்தும் வேறு கருவியோ, இரத்தம் சிந்தும் தியாகத்தின் வேறு அறிகுறியோ எழுப்புதலும் கூடாது".

## ஷாவின் இறுதி நாள்

ஷா உணர்விழந்து கிடந்த கடைசி நாளில், உள்ளூர் பாதிரியார் வந்து சமயச் சார்பாகச் செய்யவேண்டிய சடங்கைச் செய்து முடித்தார்.

"ஷா நாத்திகர் அல்லர். அவர் கடவுளை நம்பியவர். அதைத் தெரிந்து கொள்ள வேண்டுமானால், அவர் எழுதிய "செயின்ட் ஜோன்" என்னும் நாடகத்தைப் படித்தால் தெரியும்" என்று சொல்லிவிட்டு சென்றார் உள்ளூர் பாதிரியார்.

ஒய்வு இல்லாமல் 50 ஆண்டுகள் உழைத்து வந்த ஷாவின் உயிர் 1950 ம் ஆண்டு நவம்பர் முதல் தேதி விடியற்காலை மூன்று மணி முதல் அமைதியுறத் தொடங்கியது. அது முதல் ஷா உணர்வு இழந்து கிடந்தார். அந்த நிலையிலேயே மறுநாள் விடியற்காலை 4–59க்கு உயிர் நீத்தார்.

பிறப்பு : 1856, ஜூலை 26
இறப்பு: 1950, நவம்பர் 2.

வாழ்ந்த காலம்: 94 ஆண்டுகள், 3 மாதங்கள், 6 நாட்கள்.

தாம் உயிர்நீத்த பிறகு, உடலை எப்படி அடக்கம் செய்யவேண்டும், தம் சொத்துக்களை என்ன செய்ய வேண்டும் என்பதை விரிவாக, விருப்ப ஆவணம் (Will) எழுதி வைத்திருந்தார்.

அந்த விருப்ப ஆவணம், எண்ணாயிரம் சொற்களைக் கொண்ட சிறப்புமிக்க இலக்கியமாகும்!



உலகப் புகழ்பெற்ற பெர்னார்ட்ஷாவின்
வாழ்க்கை வரலாறு தனித்தனி நிகழ்ச்சிகளாக
எளிய தமிழ் நடையில் கூறப்பட்டுள்ளது.